# கண்ணன் காட்டிய கருமயோகம்

——x——

"கேந்திரத் தொண்டர்"

சமர்ப்பணம்

விவேகானந்த கேந்திரத்தின்
கிராம முன்னேற்றத் திட்டத்தில் தொண்டுபுரியும்
சகோதர சகோதரியர்க்கு

விவேகானந்த கேந்திர வெளியீடு
விவேகானந்தபுரம்
கன்னியாகுமரி-629 702

முதல் பதிப்பு: பிப்ரவரி 1986 1000 பிரதிகள்

பதிப்பாளர்
**விவேகானந்த கேந்திரம்**
விவேகானந்தபுரம்
கன்னியாகுமரி-629 702
தமிழ்நாடு



பிரச்சாரவிலை: **Rs. 2.50/-**

அச்சிட்டோர்:
*பாம்பே பிரிண்டர்ஸ்,*
*நாகர்கோவில்-3.*

# பொருளடக்கம்

# பணிவுரை

விவேகானந்த கேந்திரத்தின் யோகப்பயிற்சி முகாம்கள், ஆன்மீக முகாம்கள், நாகர்கோவில் கீதாகிளப் முதலியவற்றில் கருமயோகம் பற்றி ஆற்றப்பட்ட சொற்பொழிவுகளின் வரிவடிவம் இந்நூல்.

பூஜ்ய வினோபாஜியின் பல கருத்துக்கள் இந் நூலில் இடம் பெற்றிருப்பதை அன்பர்கள் காணலாம். கீதை சுலோகங்களின் தமிழாக்கம், ஐயா துளசிராம் அவர்கள் இயற்றி, கேந்திரம் வெளியிட்ட ''ஸ்ரீமத் பகவத் கீதை, மூலமும் செய்யுள் வடிவிலான தமிழாக்கமும்'' என்ற நூலில் இருந்து எடுக்கப் பட்டது.

இந்நூலைப் படிக்கும் அன்பர்கள் வாழ்வில் நலம் பெருக இறைவன் அருளுவானாக.

ரத ஸப்தமி,
16-2-1986,
கன்னியாகுமரி.

இவண்,
இறைவன் பணியில்,
விவேகானந்த கேந்திரம்.

# கண்ணன் காட்டிய கர்மயோகம்

---

## அத்தியாயம்: 1 ராஜகோபுரம்

நம் பாரத புண்ணிய பூமியில் மக்களை நல்வழிப்படுத்துகிற நூல்கள் பல உண்டு. பரம்பொருளாகிய ஆனந்தத்தை, ஞானத்தை, அறிவை, நல்லுணர்வை, சத்தியத்தை, அன்பை, அழகை, அமைதியை, பேற்றை, படைப்பாற்றலை, சக்தியை, உய்த்துணர்ந்த பெரியவர்கள் நம்மீது கொண்ட கருணையினால், தம் அனுபவங்களை நாமும் பெற்றுய்ய வேண்டும் என்று சாஸ்திர நூல்களை விட்டுச் சென்றிருக்கிறார்கள். அவற்றுள் கீதா சாஸ்திரத்துக்கு, பகவத்கீதைக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. செயல்திறம் மிகுந்த உடலில், மனத்தில், அறிவில் மையம் கொண்ட மனித வாழ்க்கையில் அசையாத, செயல்படாத, நிலைத்த ஆன்மீக உணர்வெனும் அமுதை அடையாளம் கண்டு கொள்கிற வித்தையை பகவத்கீதை போதிக்கிறது. வியாஸ பகவான் நம்மீது கொண்ட கருணைக்கு வேறு அடையாளமும் வேண்டுமோ? வேதசாரமாயும் உபநிஷதங்கள் எனும் பசுக்களின் பாலாகவும், நம் அனைவரின் அன்பிற்கும் பொருள் தருபவனான கண்ணபிரானின் வாழ்க்கைத் தத்துவமாகவும் பகவத்கீதை விளங்கி வருகிறது. நம் பெரியவர்கள் எல்லாம் நாம் ஒவ்வொருவரும் தம் வேதசாகையில் உள்ள உபநிஷதம், ருத்ரம், புருஷஸூக்தம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் இவற்றுடன் ஸ்ரீமத் பகவத்கீதையைத் தினம் ஓத வேண்டும் என்று கருணை கசிய ஆணையிட்டிருக்கிறார்கள். ராமாயணத்தையும், பகவத் கீதையையும் இந்நாடே தன் வாழ்க்கைக்கான பாடப்புத்தகமாக ஏற்றுக்கொண்டுள்ளது.

*   *   *   *   *

நம் அனைவரின் வாழ்வும் மலரவேண்டும் என்று கருதிய நம் ஆசாரியர்கள், ஸ்ரீமத் பகவத் கீதைக்குத் தத்தம் கொள்கைக்கேற்ப உரைவகுத் திருக்கிறார்கள். ஆதிசங்கரரின் அருள் உரை, இராமானுஜர், மத்வர் ஆகியோரின் உரைகளை பக்தருலகம் நன்கறியும். ஸ்ரீவேதாந்த தேசிகர், கீதார்த்த சங்கிரஹம் என்ற சிறுநூலை அருளியிருக் கிறார். லோகமான்ய திலகரின் கீதாரகசியம், அரவிந்தரின் கீதைச் சொற்பொழிவுகள், மகாத்மா காந்திஜியின் கீதை விளக்கம், வினோபாஜியின் கீதைப் பேருரைகள், கீதைச் சிந்தனைகள், ரமண மகரிஷி கீதையிலிருந்து பொறுக்கி எடுத்த சுலோகங் களின் விளக்கம், இவை அனைத்தும் நம் பெரிய வர்கள் கீதைப் பிரச்சாரத்துக்கு எத்தனை முக்கியத் துவம் அளித்திருக்கிறார்கள் என்பதற்குச் சான்று. மதுசூதன சரஸ்வதி, ஸ்ரீதரர், ஞானேசுவரர் இவர் களுடைய கீதை உரைகளை இந்நாடு அன்புடன் ஏற்றிருக்கிறது.

*   *   *   *   *

பகவத்கீதை தரும் செய்திதான் என்ன? பூரண நிலையை, முழுமையை அடைய மனிதன் செய்யும் முயற்சிகளைத் தீவிரமாக்கவேண்டும், செயல்புரிய வேண்டும், சுதர்மத்தைப் பேண வேண்டும், சாத்திரத்தின் வழி நின்றொழுக வேண்டும், திறமை யுடன் ஒரு வேள்வி புரிவதைப் போலச் செயல் புரிய வேண்டும், சாத்திரத்தின் வழி நின்று பொருள் பொதிந்த பணியை நம்பிக்கையுடன் ஆற்ற வேண்டும்; தம்உள்ளத்துணர்வை, மனமென்மையை வெளிப்படுத்தும் மந்திரங்களை ஓதிக்கொண்டே தொண்டாற்ற வேண்டும்; சுயநலத்தை விட்டுப் பணிபுரிய வேண்டும் என்று கீதை கூறுகிறது. கீதைத்தொண்டனானவன் தன் கருமத்தின் பயனைக்கடவுளுக்கும் சமூகத்துக்கும் அர்ப்பணித்துப்

பற்றற்று பணிபுரிய வேண்டும். செய்யும் பணிக்கு எத்தனை முக்கியத்துவமோ அத்தனை முக்கியத் துவம் செய்பவனின் மனநிலைக்கும் உண்டு என்கிறது கீதை. இறுதியில் அனைத்தையும் இறைவன் திருவடியில் சார்த்திவிடும் சமர்ப்பண யோகத்தையும் கீதை சொல்லித்தருகிறது. வாழ்க் கையைக் கூறு போட்டுவிடாமல் கரும, ஞான, பக்தி ராஜயோகங்களை இணைத்து மானுடவாழ்வைப் பூரணமாகக் காணச் சொல்லுகிறது பகவத்கீதை. பக்திச் சுவை சொட்டும் சுலோகங்கள் என்ன, மனத்தை அடக்க உதவும் ராஜயோக அறிவுரைகள் என்ன, வாழ்க்கைத் தத்துவத்தைச் சொல்லித்தரும் ஞான போதனைகள் என்ன, நன்கு தொழில்புரியக் கற்றுத்தரும் கர்மயோக விளக்கம் என்ன இவை அனைத்தும் கீதையில் காணக்கிடைக்கின்றன. மோக்ஷதர்மத்தை கீதை அற்புதமாக விளக்குகிறது.

* * * * *

ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த சிந்தனை ஓட்டத்தில் பகவத்கீதைக்குப் பேரிடம் உண்டு. கீதை என்பதன் முழுப்பொருளே 'தியாகம்' என்பது தான் என்பது ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்து.

''பேடித்தனத்தை விட்டுச் செயலில் இறங்கு. இந்த மனச்சோர்வு உனக்குப் பெருமை தராது. மனத்தில் ஜுரமின்றி யுத்தத்தில் ஈடுபடு'' என்று அர்ச்சுனனைக் கண்ணன் தட்டி எழுப்புகிற வார்த்தைகள் சுவாமி விவேகானந்தரின் இதயத்தை எப்படிப் பிசைந்திருக்கும் என்று கற்பனை செய்து பாருங்கள்! தன் பலத்தை மறந்து சோம்பிய அனுமனை ஜாம்பவான் தட்டி எழுப்பி, இராமனின் திருத்தொண்டில் இசைவித்தது போல், தன் திறமையை, பயிற்சியை, பொறுப்பை மறந்து வில் லைக் கைநழுவவிட்டுச் சோர்ந்த அர்ச்சுனனைக் கண்ணன் தட்டி எழுப்பியதுபோல்தானே சுவாமி விவேகானந்தரும் இந்த நாட்டைத் தட்டி எழுப்ப

வந்தார்? ''பணியாற்றும் பொருட்டுச் சோம்பலை விட்டு எழுந்திரு! தொடர்ந்து முயற்சி செய்!'' என்பதுதானே அவரது தாரக மந்திரமாக இருந்தது.

''கண்ணன் சொன்ன கீதோபதேசம் தான் உலகம் அறிந்த மிகப்பெரிய உபதேசம். அதை எழுதியவன் உலகைப் புதுப்பிக்க வந்த அற்புதர்களில் ஒருத்தன். கீதையை எழுதியவனுடைய அறிவைப் போன்று இன்னொரு அறிவு இந்த உலகத்துக்கு இனி எங்கே கிடைக்கும்'' என்று சுவாமிஜி கூறியிருக்கிறார். சுவாமி விவேகானந்தரைப் பின்பற்றி அவர் வழி வந்த பெரியவர்களும், ஸ்தாபனங்களும் கீதைப்பிரச்சாரத்துக்கு எத்தனை முக்கியத்துவம் அளித்திருக்கின்றன என்று அனைவரும் அறிவர்.

* * * * *

இந்நாட்டின் ஆத்மா உறங்கிக் கிடந்ததைத் தட்டி எழுப்ப மாபெரும் முயற்சிகள் கடந்த முன்னூறு ஆண்டுகளாக நடந்துவருகின்றன. அடிமைத்தனம் விலகப்பாடுபடுகிற அதே தருணத்தில் நாட்டைப் புனரமைக்க, சமுதாயக் கொடுமைகளை ஒழிக்க முயற்சிகள் நடந்தன. இந்த மும்முனைப் போராட்டத்திற்குப் பாடநூலாக பகவத்கீதையைத் தவிர வேறு எந்த நூல் இருந்திருக்க முடியும்! சுதந்திரப் போராட்டத்தைத் தம் வாழ்வின் ஆன்மீகப் போராட்டமாகவே மாற்றி விட்டவர்கள் நம் பெரியவர்கள். கீதைக்கு புதிய விளக்கங்களும், உரைகளும் தோன்றின இந்தக் காலக்கட்டத்தில். கீதை கூறுகிற கருமயோகத்துக்குத் தொண்டு என்பதே பொருளாயிற்று. சமுதாயத் தொண்டு, நாட்டுக்குச் சேவை, துன்புற்றோருக்குப் பணிவிடை, நாட்டுவிடுதலைக் கெனப் போராடுதல் என்பதற்கெல்லாம் கீதை தத்துவ விளக்கம் தந்தது. நம் பெரியவர்கட்கு வழிகாட்டியாக, திசைகாட்டியாக, ஆசானாக, கைவிளக்காக, சேவைத்திட்ட விளக்கமாக, புத்தொளி சிந்திற்று

பகவத்கீதை; சுதந்திரம் கிடைத்த பின்பு நாட்டுப் பணியில், சமுதாயப் பணியில் ஈடுபட்டவர்களுக்கும் பொதுமக்களுக்கும் தம்தத்துவக்கருத்தை விளக்க நம் பெரியவர்கள் இன்றும் பகவத்கீதையையே பயன் படுத்தி வருகிறார்கள். இன்று கீதை உலகெங்கும் பரவி உலகின் பலநாடுகளில் வாழும் மக்களின் இதயத்தாகத்தைத் தணித்து வருகிறது.

* * * * *

விவேகானந்த கேந்திரத்துக்கும் பகவத்கீதைக் கும் உள்ள உறவினை தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவென வருணிக்கலாம். தொண்டின் மூலம் வாழ்க்கையின் இறுதி லக்ஷியமான ஆன்மீக சுதந் திரத்தை எட்டிப்பிடிக்க வேண்டும் என்று சுவாமி விவேகானந்தர் நமக்கு உத்தரவிட்டிருக்கிறார். கீதையில் பொறுக்கி எடுக்கப்பட்ட 26 சுலோகங்கள் தினமும் கேந்திரத்திலும் அதன் கிளைகளிலும் ஓதப் படுகின்றன. கேந்திரத்தின் யோக முகாம்களில் கீதைச் சொற்பொழிவுகள் நடக்கின்றன. அசாமிய மொழியில் கீதையை ஆக்கி வெளியிட முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

தமிழில் கீதை மொழி பெயர்ப்புக்களை ஆயிரக் கணக்கான குழந்தைகளும், பெரியவர்களும், பண் பாட்டு வகுப்பு மாணவர்களும், இளைஞர் முகாமிற்கு வரும் தொண்டர்களும் படித்தின்புறுகிறார்கள்.

## அத்தியாயம்: 2 கொடிமரம்

மனிதவாழ்க்கை இன்று துண்டு துண்டாக நிற் கிறது. அதனை ஒருங்கிணைக்கும் உள்ளிழையைக் காண முடிவதில்லை. வாழ்வின் மையப் புள்ளியாக எதுவும் இருக்கிறதா என்ற கேள்விகூட பலர் வாழ் விலே எழுவதில்லை. அறிவுள்ள நல்லோர் வாழ்வில் கூட இந்த முழுமையும் இணைப்பும் தாளம்தவறித் தடுமாறி விடுவதைக் காண்கிறோம்.

இதைவிடக் கொஞ்சம் முன்னேறி, தம் வாழ்க்கையை அலசிப் பார்த்து, வாழும் முறைப்படி வாழ விரும்புபவர்களிடையே கூட இந்த விரிசல்கள் வாழ்க்கையில் தென்படத் தான் செய்கின்றன. தொழில் என்று ஒரு பிரிவு, இன்பம் தேடுதல், ஒய்வு பெறுதல் சமூக வாழ்க்கை, என்று இப்படி வாழ்க்கை பலப் பலபகுதிகளாகப் பிளவுண்டு அவை ஒன்றோடொன்று தொடர்பின்றி நிற்கின்றன.

இன்னும் கொஞ்சம் முன்னேறி சமுதாயப் பிரக்ஞை உடையவர்கள் வாழ்க்கையை எடுத்துக் கொண்டாலும் கூட அவர்கள் வாழ்க்கையில் நீதி, நேர்மை, ஒழுக்கம், இவை ஒரு பகுதியாகவும் இன்பம் தேடுதல், அமைதி பெறுதல், இவை இன்னொரு பகுதியாகவும் நிற்கின்றன.

இதைவிட இன்னும், ஆன்மீகப் பாதையில் முன்னேறி, இன்பம் துய்த்தல் என்ற சொல்லுக்குப் பரம்பொருளைக் காணுதல் என்று பொருள் கொள்ளத் தெரிந்த நல்லவர்கள், உழைத்துண்ணுகிற நல்லவர்கள் வாழ்க்கையைப் பாருங்கள். அதிலேகூட, அவர்கள் செய்கிற சமூகப்பணி அவர்களுடைய ஆன்மீக வளர்ச்சிக்கு உதவுவதில்லை. அவர்கள் தம் ஆன்மீக வளர்ச்சிக்கு எனச்செய்கின்ற தவம், தானம், வேள்வி, சமுதாய நன்மையாக மலர்வதில்லை. இப்படி எந்த நிலையிலும் மனித வாழ்க்கை துண்டுபட்டுப் போய் நிற்கிறது. வீடு கட்டுகிறேன் என்று துவங்கிய மனிதன் சுவர்கள் தான் கட்டியிருக்கிறான். வெறும் சுவர்கள் வீடாகுமா?

கண்ணன் காட்டிய கர்மயோகம், சுவர்களை வீடாக்குகிற, இல்லமாக்குகிற, லக்ஷ்மிவதியும் கிருஹமாக்குகிற கலையைச் சொல்லித் தருகிறது. வாழ்க்கையில், கலை, தொழில், வியாபாரம், இன்பம் துய்த்தல், ஒய்வெடுத்தல், பிரார்த்தனை செய்தல், சமூக நடவடிக்கைகள், அண்டை அயல் மனிதருடன் உறவாடல், ஆகிய அனைத்தையும்

இணைத்து வாழ்க்கையின் சிதறுண்ட மலர்களை வாழ்க்கை என்ற மாலையாக்கக் கற்றுத் தருகிறது, கண்ணன் ஏற்றிய கீதை என்ற கைவிளக்கு.

ஆகவே கர்மயோகம் என்ற பெயரில் கண்ணன் தந்த கீதை உபதேசம், வாழ்க்கையில் மனிதன் செய்கின்ற ஒவ்வொரு செயலையும் சமூகப் பயன், ஆன்மீக இன்பம் என்ற இருவிதப் பயன்களும் உடையவையாக ஆக்கும் வித்தையைக் கற்றுத் தருகிறது. தொழில்வாழ்க்கை, புறவாழ்க்கை, இவற்றின்மூலம் தான் செய்கின்ற, குளித்தல், நடத்தல், உண்ணுதல், பொருளை மற்றவர்க்கு அளித்தல், போன்ற அனைத்துச் செயல்களையும் தன் அகஇன்பம், ஆன்மீக இன்பம், பக்திஎனும் ஆனந்தம் வளரும் படி செய்ய உதவும் கருவிகளாக மாற்ற கீதை உபாயம் சொல்லுகிறது. மேலும் தன் ஆன்மீக நலனுக்காகத் தான் செய்கின்ற ஆசனம், பிராணாயாமம், தவம் ஆகிய அனைத்துச் செயல்களும், உலக நன்மைக்கு உதவும்படி, எல்லோரும் இன்புற்றிருக்க உதவும்படி ஆக்கவும் கீதை உபாயம் சொல்கிறது. இந்த இருவித ஆன்மீகப்பயனே, உலகப்பயனே, கீதைதரும் கர்மயோக விளக்கமாம்.

கீதை தரும், கர்மயோக விஞ்ஞானம் எட்டு படிகளை, வளர்ச்சி நிலைகளைக் கொண்டது. அவையாவன.

1. செயல், செயலின்மை ஆகிய இரண்டும் பரம்பொருளை அடைய உதவும் வழிகள் எனினும், அவற்றுள், கருமம்புரிதல் ஞானவழியைக் காட்டிலும், சிறப்பானது. (கீதை மூன்றும் அத்தியாயம் சுலோகம்-8)

2. மனிதன் தன் சுயதருமம், சுபாவம் இவற்றைப் பின்பற்றி சுயகர்மத்தைச் செய்ய வேண்டும். (18—46)

3. மனிதன் செய்யத்தகுந்த, தள்ளத் தகுந்த செயல்களைப் பற்றி அறிய, சாஸ்திரங்களின் துணையை நாடவேண்டும். (16—24)

4. மனிதன் திறமையுடன் தொழில் புரிய வேண்டும். அதுவும் ஆன்மீக சாதனையே. (17—13)

5. அப்படித் திறமையுடன், சாத்திரத்தின் வழி நின்று ஆற்றுகின்ற பொருள் பொதிந்த கருமத்தின் பயனை, விளைபொருளை, பழத்தை சமூகத்துக்கும் பரம் பொருளுக்கும் அர்ப்பணித்து விடவேண்டும். (2—47)

6. பற்றற்றுப் பணிபுரிய வேண்டும். (2—48)

7. பணிபுரிகின்றவன், அன்பு. சமர்ப்பண பாவம், தியாக உணர்வு, மகிழ்ச்சி இறையன்பு ஆகிய உணர்வுடன் நல்ல பாவனையுடன் பணி புரிய வேண்டும்.

8. இறுதியில் அத்தனையையும் பரம் பொருளின் திருவடியில் சமர்ப்பணம் செய்து, அனைத்தையும் நிறைவாக்கிக் கொள்ள வேண்டும். முழுமை பெறச் செய்ய வேண்டும். (18—66)

இவற்றுள் நான்காம் நிலையான திறமையுடன் பணிபுரிதல் என்பதற்குக் கீதை தரும் விளக்கமாவது.

1. சாத்திர விதிப்படி பணி ஆற்றுதல்,
2. பயனுள்ள கருமத்தை ஆற்றுதல்.
3. தன் பணியின் முழுப்பொருளேயும் உணர்ந்து, பணியின் முழு அர்த்தமும், அதன் ஒவ்வொரு துளியிலும் தெரியுமாறு கருமம் புரிதல்.
4. தியாக உணர்வு கொண்டிருத்தல்.
5. தான் புரியும் நற்கருமங்கள் சமுதாயத்துக்கும், பரம்பொருளுக்கும் உகந்த நற்பயனை அளிக்கும் என்ற நம்பிக்கையோடு தொழில் புரிதல். (17—13)

இப்படி ஒருவன் கருமம் புரிவானாகில் அவன் பாவங்கள் ஒழிந்து, மோஹம் அழிந்து, சுயஉணர்வு உண்டாகி, தூயவனாகி, ஜனகனைப் போல, வளர்ந்து முழுமையை அடைவான். பூரணத்தைப் பெறுவான், அவனைக் கருமங்கள் பற்றா என்கிறான் கண்ணன்.

இப்படிக் கண்ணன் கூறுகிற கர்மயோகம், மற்ற யோகமார்க்கங்களிலிருந்து மாறுபட்டது போல் தோன்றுகிறது. எனினும் கூட, இந்த வித்தியாசங்கள் பெயரளவில் மட்டுமே உள்ளன என்பது கண்ணன் கருத்து. கர்மயோகம் புரிந்து வாழ்க்கையில் முழுமை அடைய விரும்புகின்ற சாதகனின் குணங்களை கீதை பல இடங்களில் வருணிக்கிறது. அதில் மனம் உருகி நைந்து, நெகிழ்ந்து, தன்வினை அனைத்தையும், இறைவனுக்குப் பண்ணுகிற பூஜையாக ஆக்கி, தன் உழைப்பின் பலனை இறைவனுக்கு அர்ப்பணித்து விடவேண்டும், என்று பக்கியோகத்தின் இலக்கணத்தைச் சேர்த்து விடுகிறது கீதை

(அத்தியாயம், 9 & 12)

இப்படித் தொண்டு புரிகின்றவன், மன உறுதி, உற்சாகம், பற்றின்மை, அஹம்பாவம் இன்றி உழைத்தல், வெற்றியிலும் தோல்வியிலும் சமத்துவம் உடையவனாக இருக்கவேண்டும். அதாவது ராஜயோகப் பயிற்சியினை, ஒரு கர்மயோகியின் வாழ்வோடு இணைக்கிறது கீதை. கொல்லாமை, வாய்மை பிரம்மச்சரியம், சொத்துச் சேர்க்காத எளிமை, திருடாமை ஆகிய யமம் பற்றிய கட்டளைகளைக் கர்மயோகிக்கு இடுகிறது கீதை. தூய்மை, திருப்தி, நன்னூல் ஓதுதல், தவம், ஈசுவரனைச் சரண்புகுதல், ஆகிய நியமங்களும் கர்ம யோகிக்கு இன்றி அமையாதவை. ஆசனம், பிராணாயாமம், மனத்தைப் புலன்களிலிருந்து பிரிக்கும் பிரத்தியாஹாரம், உறுதிபூணக்கற்பிக்கும் தாரணை, தியானம், ஸமாதி ஆகிய அனைத்து ராஜயோகப் பயிற்சிகளும், கர்மயோகிக்கு உதவும்.

அறிவின், ஞானத்தின் துணைகொண்டு கர்ம யோகி செயல்படவேண்டும். செயத்தக்க தள்ளத் தக்க கருமங்களை அடையாளம் கண்டு கொள்ள ஞானநூல்கள் வழிகாட்டும் என்று, கர்மயோகியின் வாழ்வில் ஞானத்தின் பெருமையை இணைத்துப் பேசுகிறது பகவத்கீதை.

இப்படி கண்ணன் காட்டும் கர்மயோகம், பக்தி விரவிய, ஞானம் கைகூடிய ராஜயோகம் உதவு கின்ற கர்மயோகம். இது அனைத்து வழிகளும் இணைந்த ஒரு ஸமக்கிர வழியாம். பூரண யோகமாம்.

இப்படிக் கண்ணன் காட்டிய கர்ம யோகத் திற்கு உதாரணம் கண்ணனே. பகவத்கீதை என்பது கண்ணனின் வாழ்க்கை விளக்கமே. அனைவரிடத்தி லும் அவன் காட்டிய அன்பும், கோபியரும், தாயா ரும், நண்பரும், அறிஞரும் அவனிடம் காட்டிய அன்பும், பக்தி யோகத்தின் விதைகளாம்.

அவன் மனஉறுதி, அஞ்சாநெஞ்சம், உடல் கட்டு, மனசமத்துவம், இவையே பகவத்கீதை காட் டும் ராஜயோகமாகும்.

ஆழ்ந்த அறிவு, சிந்திக்கும் திறன், சாஸ்திர ஞானம், இவை கண்ணனின் ஞானத்திற்குச் சான் றாம்.

கண்ணனிலும் பெரிய கர்மயோகி யார் உளர்? தோல்வி வெற்றி பகைவர் நண்பர் அனைவரையும் சமதிருஷ்டியுடன் நோக்கி போர்க்களத்தே பரஞான மெய்கீதை புகன்ற கண்ணன் பகவத்கீதை காட்டும் கர்மயோகத்திற்கு வாழ்கின்ற ஒரு உதாரணம். அவனே நிலைத்த அறிவுடைய ஸ்திதப் பிரக்ஞன். அவனே ஸந்நியாசி. அவனே கர்மயோகி. அவனே தியான யோகி, விக்ஞானி, விசுவரூபி, லக்ஷிய பக் தன், க்ஷேத்திரக்ஞன், குணாதீதன், தேவன், புரு

ஷோத்தமன் சாத்துவிகக்கர்த்தா. இப்படி கீதையின் ஒவ்வொரு சுலோகமும் கண்ணனின் வாழ்க்கை வரலாறே.

ராமாயணமும், கர்மயோக விளக்கமே. ராமனின் அனைத்துக் குணங்களையும் கீதையில் அடையாளம் கண்டு கொள்ளலாம். பரதனும், இலக்குவனும், அனுமனும், கர்மயோகத்திற்கு இந்நாடு கண்ட உதாரணங்களாவார்.

இதேபோல் பக்த விஜயக்கதைகளில் வரும் பக்தர்கள் வெவ்வேறு தொழில் செய்யினும் உண்மை யான கர்மயோகிகளே. பானைவனையும் கோரா கும்பர், பெற்றோருக்குப் பணிவிடை புரியும் புண்ட லீகன், ஸ்ரீசேனா நாவிதர், ஸாவதாமாலி, என்ற பூந்தோட்டக்காரன், நரஹரிஸோனன் என்ற பொற் கொல்லன், ரவிதாஸர் என்ற சக்கிலியர், ஒஹ்ரு சாஹுகர் என்ற வட்டிக்கடைக்காரர், ஜயமல்லர் என்ற மன்னன், தனாசடர் என்ற விவசாயி, கபீர் என்ற நெசவாளி, நாமதேவர் என்ற தையல்காரர் பெரியதாசர் என்ற வஸ்ர வியாபாரி என்று இப்படி அனைவரும் கருமயோகம் புரிந்து விட்டலனை வழி பட்டனர். செய்தொழில் எதுவாயினும் அதை உண் மையுடன் செய்து பரம்பொருளை எட்டுக என்கிறது கீதை. இதைத்தான் பாரதியும்

வையகம் காப்பவரேனும்—சிறு
வாழைப்பழக்கடை வைப்பவரேனும்,
பொய்யகலத் தொழில் செய்தே—பிறர்
போற்றிட வாழ்பவர் எங்கணும் மேலோர்

என்று பேசினார்.

தமிழிலக்கியத்தில் இப்படிச் சாதாரண தொழில் வாழ்க்கை புரிந்தும் இறைவன் மீது பக்திகொண்டு கருமயோகியராய் வாழ்ந்த பெரியவர்கள் வரலாறு தான் பெரிய்புராணம். அரியணை ஏறி அரசு புரிந்த சேரமான் பெருமாள், மீன்பிடிக்கும் அதிபத்தர்,

மண்பாண்டம் செய்துவந்த திரு நீலகண்டர், வணிகராய் வாழ்ந்த இயற்பகையார், விவசாயம் செய்து வந்த இளையான் குடிமாற நாயனார், கண் ணப்பன் எனும் ஒப்பிலா வேடன், பக்தருக்குத் துணி துவைத்துப் போட்ட திருக்குறிப்புத் தொண் டர், இல்லத்தரசியாக விளங்கின காரைக்கால் அம் மையார் இவர்கள் அனைவரும் கர்மயோகிகளே.

ஆக, கண்ணன் சொல்லும் கருமயோகம், குலம், தொழில், இடம், கல்வியறிவு, இவைகளால் பேதம் ஏற்படா வண்ணம், ஆணும், பெண்ணும் செய்து ஒழுகவல்ல வழி. இது வாழ்வை ஒன்றாக இணைத்து அனைத்துக் காரியங்களையும் இறைமய மாக ஆக்கும் வித்தையாம். இதன் அடிப்படை விதிகளை அடுத்த கட்டுரையில் காண்போம்.

## அத்தியாயம் 3: பலிபீடம்

கண்ணனின் கருத்துப்படி ஆன்மா ஒன்றும் செய்யாதது, செயலற்றது. ஆன்மாவின் உண்மை யான நிலையை, இயற்கை நிலையை, மனிதன் அடைய முற்படும் போது தான், செயலற்ற ஒன்றை, செயலின் மூலம் அடைய முடியுமோ முடியாதோ என்ற ஐயம் சாதகனுக்கு ஏற்படுகிறது. பரம் பொருளை, இறைவனை, ஆன்மாவை, அமைதியைத் தேடுவது ஒரு புதிய செயலாகிவிட்டால் என்ன பண்ணுவது என்று அவன் கேட்கிறான். அதற்குக் கண்ணன் கூறுவது என்ன? ''அர்ச்சுனா, மனிதனின் இறுதி லட்சியம், அனைத்தையும் செய்தும் ஒன்றும் செய்யாதது போல் இருக்கின்ற மையப்பொருளை அடைவது தான். இதற்கான முயற்சிகள், நாம் ஏற்கெனவே, முயற்சி இன்றித் தன்னிச்சையாகச் செய்து கொண்டிருக்கின்ற செயல்களிலிருந்து துவங்கி, நடைபெற வேண்டும். ஆகவே செயலின் மையை விட, செயல் சிறந்தது. முயற்சி இன்மை யை விட, முயற்சி சிறந்தது. சன்னியாசத்தை விட, கர்மயோகம் எளியவழி. நிர்க்குணமாகப் பரம்

பொருளை வழிபடுவதை விட சகுணப்பரம் பொரு ளாக அதனை வழிபடுவது எளியவழி என்று கண்ணன் கூறுகிறான்.

''கர்மயோகம் புரிவதற்கு எனக்குச் சக்தி இல்லையே தொண்டு புரிவதற்கு எனக்கு அறிவு இல்லையே. புதுப்பணி தொடங்குவதற்கு எனக்குத் திறமை போதாதே. நான் குறையுள்ளவன், எளியவன்'' என்கிறான் தொண்டன்.

அதற்குக் கண்ணன் சொல்வான்! ''குழந்தாய் புதிதாக ஒன்றும் செய்ய வேண்டாம். ஏற்கெனவே தான் உன் உடம்பும், மனதும் அறிவும் மூச்சும் செயல் பட்டுக்கொண்டே இருக்கின்றனவே. அவற்றையே, அந்த அசைவுகளையே இயக்கங் களையே பயன் படுத்திக் கொள்ளேன்''.

''உடம்பு எப்பொழுதும் அசைந்து கொண்டே இருக்கிறது. அரை நிமிஷம் ஓரிடத்தில் உட்கார முடிகிறதா? கால் ஆடிக்கொண்டே இருக்கிறது. கை தலையைச் சொறிகிறது. ஆக உடல் என்பது எப்போதும் இயங்கிக் கொண்டே இருப்பது. அதன் இயக்கத்தைப் பயன் படுத்தி, தன்னை உணர். அந்த இயக்கம் சீராகச் செயல்படும் ஒழுங்கினை ஆரம்பிக்க உனக்கு உதவும்'' என்கிறான். அதே போல் மூச்சு விடுவதற்கு மனிதன் கற்றுக் கொள்ளவா வேண்டும்? ஆகவே மூச்சு விடுவதிலும் மனிதன் சக்தியைச் செலவழித்துத் தானே வருகிறான். அந்த மூச்சைச் சற்று ஒழுங்காக, சீராக விடுவதே தானே பிராணாயாமம்! அதுபோல, மனம் எப்போதும் ஆசையும் துவேஷமும், விருப்பும் வெறுப்பும் கொண்டு தானே இருக்கிறது. இந்த விருப்பு வெறுப்பை, நல்லதை விரும்புவதாகவும், கெட்டதை வெறுப்பதாகவும் ஒழுங்கு பண்ணிக் கொள்வது தானே பக்தி. அதேபோல அறிவு, ஒவ்

வொரு கணமும், இவ்வுலகை இது நல்லது இது கெட்டது என்று துண்டு போட்டுக் கொண்டுதானே இருக்கிறது. இந்த அறிவை இது சா சுவ தம், நித்தியம், இது நிலைத்த பரம்பொருள் என்றும், இது தற்காலிகமானது, இது அழிவது இது அனித் தியம் என்றும் பிரித்தறிவதற்குத் தானே விவேகம் என்று பெயர். ஆகவே, புதிதாகச் சக்தியைச் செல வழிக்கத் தேவை இல்லை. ஏற்கெனவே, வீண் பண்ணிக் கொண்டிருக்கிற சக்தியை, உடல், மூச்சு, மனம், அறிவு ஆகியவற்றின் சக்தியை, ஒழுங்கு பண்ணுவது தான் இறைவனை அடையும் வழி என்கிறான் கண்ணன்.

''கணப் பொழுதேனும் செயலற்றிருத்தல் யார்க்கும் உலகில் இயலாது.

உயிரினம் யாவும் இயற்கை விதியால் தன்வசமற்றே செயலாற்றும்'' (3-5)

இந்த உபதேசம், தன்னிடம் செயலாற்றும் திறன் இல்லை என்று சோம்பி இருப்பவனுக்கு. இதைவிட ஒழுக்க உயர்வு, நியாய உணர்வு சற்று அதிகமானவனுக்கு கீதை என்ன சொல்லுகிறது தெரியுமா? ''நீ உணவு உண்கிறாய், உடை உடுத்துகிறாய், வீட்டில் வசிக்கிறாய். இந்தவசதி கள் எல்லாம் உழைப்பினால் முயற்சியினால் கருமத் தினால் யாரோ ஒரு உழைப்பாளி படைத்த'து தானே. அதை எல்லாம் நீ அனுபவித்து விட்டு, நீ உழைக்க மாட்டேன் என்பது, இவ்வுலகில் கூட நியாயம் இல்லையே, இறைவன் சன்னதியில் இது எப்படி நியாயமாகும்? ஆகவே உழை, தொண்டுபுரி'' என்கிறது. ''வினை ஆற்றாவிடில் உடலைப்பேணிக் காப்பதும் உன்னால் ஆகாது'' (3-8) இதைக் காட்டிலும் நியாய உணர்வு, தன்மானம் ஆகியவை மிகுந்த ஒரு சாதகனுக்குக் கீதை இதைவிட மென்மை யான அறிவுரை தருகிறது. கருமம், உழைப்பு, தொண்டு இவை உனக்கு மோக்ஷத்தைத் தர

வல்லவை. ஜனகனைப் பார். அவர் இவ்வுலகில் இருந்து கொண்டே ஊருக்கு உழைத்துக் கொண்டே, தன்னைத்தானே திருத்திக் கொள்ளலாம், இறைவனுக்கு உகந்தவனாகத் தன்னை ஆக்கிக் கொள்ளலாம் என்று காட்டி இருக்கிறார். உழைப்பு, தொண்டு, கருமம், ஆன்மீகத்துக்கு விரோதம் அல்ல என்று கீதை பகர்கிறது.

''ஜனகர் முதலிய ஞானியர் மேலோர்
கர்மம் செய்தே வீடுற்றார்'' (3-20)

சிலருக்குச் சமுதாயக் காரணங்களே தொண்டு புரியத் தூண்டுவதற்குப் போதுமான காரணமாக அமையலாம். நல்லவர்கள் தொண்டு புரியாமல், சாத்துவிகர்கள் பணிபுரியாமல், உலகம் எப்படி நடக்கும்? உலகுக்கு நன்மைபுரியும் ஆசை உனக்கு இல்லையா? உடல் உழைப்பு, உணர்வின் ஒழுங்கு, விவேகம், மனஉறுதி இவை எல்லாம் இல்லாவிடில் உலகுக்கு எப்படித் தொண்டுபுரிவாய்? சிதறிப் போய்க்கொண்டிருக்கிற இந்த சமுதாயத்தை எப்படி ஒன்று சேர்ப்பாய்? ஆகவே கருமம்புரி, உழை, முயற்சிசெய், தொண்டுபுரி!

''உலகின் நலனை உணர்ந்தே சீரிய கர்மம்
செய்தல் உன் கடனாம் (3-20)

இன்னும் சிலபேர், கருமத்தினால் வருகின்ற பலன், பழம், பயன் தேவையில்லாத அளவுக்கு உயர்ந்திருப்பார்கள். அவர்கள் ஏன் தொண்டு புரிய வேண்டும்? தொண்டு புரிந்து அவர்கட்கு ஆகப் போவுதென்ன? தொண்டு புரிவதனால் அவர்கட்கு லாபமும் இல்லை, தொண்டு புரியாததனால் அவர் கட்கு நஷ்டமும் இல்லையே! என்றால் கீதை சொல் கிறது—அப்படி அலட்சியமாக இராதே. நீ நல்லவன் தானே, ஒழுக்கம் மிகுந்தவன் தானே, இறைவனை அடையப் புகுந்தவன் தானே? அப்படி நல்லவனாக

இருக்கிற உன்னைப் பார்த்துத் தானே பாமர ஜனங்கள் தங்கள் வாழ்க்கையில் நடந்து கொள்வார்கள்! ஆகவே மற்றவர்கட்கு ஒரு முன்னுதாரணமாக விளங்குவதற்கென்றாவது நீ கருமம் புரி. தொண்டு புரி. சேவை பண்ணு! நீ வினைப்பயன் தேவையில்லை என்று சும்மா இருக்கலாம். உண்மையில் முழுமை உடையவனாக இருக்கலாம். ஆனால் உன்னைப் பார்த்துப் பாமரமக்கள் சோம்பேறிகள் ஆகிவிடக் கூடாது. ஆகவே தொண்டுபுரி, உழை.

''மேலோர் எதனைச் சீரோடு செய்வர்
அதனை அதனைப் பிறர் நோற்பார்
அறவோர் எதனைத் திருநெறி என்பர்
ஏனையர் அவ்வழி ஏகிடுவார்.'' (3-21)

''பார்த்தா இல்லை எனக்கோர் கடமை
உலகம் மூன்றில் என்றறிவாய்;
யான் எய்தாததும் எய்தவும் ஒன்றிலை
எனினும் செயலே புரிகின்றேன்'' (3-22)

என்கிறான் கண்ணன்.

அடுத்தததாகத் தொண்டின் மிக உயர்ந்த நிலையைப் பற்றிப் பேசுகிறான் கண்ணன். இறைவன் நல்ல காரியங்களை உலகில் நடத்த நல்லவர்களைத் தேர்ந்தெடுக்கிறான். அப்படி இறைவனின் கைக்கருவியாக, ஆகிவிடு. காலியாக இருக்கிற புல்லாங்குழல் கண்ணனின் உதடுபட்டு, இசைமழை பொழிவதுபோல, நீயும், அவன் கைபட்டு, உலக சேவை புரியும் புண்ணியக் கருவியாக ஆகிவிடு. அப்போதும்கூட தொண்டும், தொழிலும் இன்றியமையாதவை, தவிர்க்க முடியாதவை என்கிறான் கண்ணன்.

''அழிவுத் தொழிலை மேற்கொண்டுள்ளேன்,
அவனியை இங்கே அழிக்கின்றேன்
போரில் நீயே இல்லா விடினும்
எதிராய் நிற்கும் பகைவரிலே
அணிஅணியாய் நிற்கும் வீரர்
ஆரும் எஞ்சாது அழிந்திடுவர் (11-32)

நீயோர் கருவி என்றே போரில்
இவர்களை வென்றுன் பணியாற்று
ஆதியிலேயே என்னால் இவர்கள்
அழிக்கப்பட்டனர் இது உண்மை (11-33)

நீ ஓர் கருவி என்றே போர் செய்
துரோணர், பிஷ்மர் ஜயத்ரதனை,
கர்ணன் போன்ற வீரரை யானே
கொன்றேன் அஞ்சாதே நீ வெல் (11-34)

உள்ளும் புறமும் உணரப்படாத, ஞானம் திணித்ததல்லாத, ஞானியும் அல்லாத பிரக்ஞை அற்றதும் அல்லாத, காணப்படாத, துண்டுபடாத, பிடிக்கப்பட இயலாத, இலக்கணமற்ற, சிந்திக்கப் பட முடியாத, சொல்லால் விளக்க முடியாத, ஒன்றே ஆன, ஆன்மாவாகிய, அனுபவமாகியது "அது". அதனில் சிருஷ்டி முழுவதும் சமமடைகிறது. அது சாந்தமயமானது, சிவமயமானது, இரண்டற்றது, என்ற முழுமையை பூரணத்தை, (மாண்டூக்ய உபநிஷத்) அடைய மனிதன் முயற்சி செய்வது பற்றி கீதை, படிப்படியாக சீரிய காரணங்களைக் காட்டிச் செல்கிறது. இந்தக் காரணங்கள் ஒன்றைக் காட்டிலும் ஒன்று மென்மை யானது. ஒன்றைக் காட்டிலும் ஒன்று நியாய உணர்வு மிக்கது. அந்தக் காரணங்கள் ஒவ்வொன்றாக நமக்குப் பொருந்துகிற மாதிரி நாம் படிப் படியாக உயர வேண்டும்.

## அத்தியாயம் 4: உள்நிலை

இப்படி, உடல், மனம், மூச்சு, அறிவு, ஆகிய பல தளங்களுள், பணிபுரிவது, முயற்சி செய்வது தவிர்க்க முடியாதது என்று காட்டிய பின் கண்ணன், அர்ச்சுனனுக்கு கருமம் எப்படிப் புரியப்படவேண்டும் என்று விளக்குகிறான். நாம் புரிகின்ற முயற்சி, செய்கின்ற தொழில் எப்படி இருக்கவேண்டும்? அது நாம் ஏற்கெனவே செய்கின்ற கருமங்களை, சேர்த்தி

ருக்கிற வாஸனைகளை, சம்ஸ்காரங்களைத் தொலைக்கிற முயற்சியாக அது இருக்க வேண்டும். ஆன்மாவின் செயலற்ற தன்மையை, கருமங்களைச் சுமத்திக் கொள்ளாத தன்மையைப் புலப்படுத்தும் முயற்சியாக அது இருக்க வேண்டும். குளிக்கப்போய் சேறு பூசிக்கொண்டதைப் போல, ஸம்ஸ்காரங்களை, வாஸனையை ஒழித்துவிட நாம் செய்யும் முயற்சி ஒரு புது ஸம்ஸ்காரமாக, கர்மச் சுமையாக ஆகிவிடக் கூடாது.

ஆகவேதான் எந்தமாதிரித் தொழிலைப் புரிய வேண்டும் என்பதைப் பற்றிக் கண்ணன் அர்ச்சுனனுக்கு உரைக்கின்ற போது, மனிதன் தன் சுயதருமத்தைப் பற்றி ஒழுக வேண்டும் என்று கூறுகின்றான். சுய தருமம் என்றால் என்ன? ஒரு சாதகனுக்கு இயற்கையாக அமைந்த தொழில், பணி, பொறுப்பு, விருப்பு, மனவேகம், நல்ல குணங்கள், இவை அனைத்தும் சேர்ந்து அவன் சுயதருமம் ஆகும். அவனது சுய தருமம் குறையுள்ளதாயினும், மனிதனின் ஆன்மீக வளர்ச்சியில் அதுதான் அவன் மனப்பூர்வமாகச் செய்யக்கூடியது. மனமார உணரக் கூடியது. அதிக முயற்சியின்றி இயற்கையாக அமைவது, சுலபமாக வருவது, ஆனால் அதே சமயத்தில், சாதகனின் ஆன்மீக வளர்ச்சி, சமூகநலன், மற்றவர்கட்கு உதவி, உலக சங்கிரஹம் என்ற உலக நற்பணி ஆகிய நற்குணங்களும் கொண்டது சுயதருமம். இரண்டு பட்டியல்கள் (லிஸ்ட்) தயாரியுங்கள். உங்களுக்குப் பிடித்தவை என்று ஒரு பட்டியல், அதில் உங்களைச் சிரமமின்றி பணி செய்யத் தூண்டுகின்ற, இயற்கையாக அமைந்த, சுலபமான உங்கள் மனத்தைக் கவர்கிற விஷயங்கள் அனைத்தையும் எழுதுங்கள். உலக நன்மை, புலனடக்கம், மனிதாபிமானம், பரோபகாரம் என்ற தலைப்பின் கீழ் நீங்கள் செய்ய விரும்புகிற விஷயங்கள், பணிகள் ஆகியவற்றைப் பட்டியலிடுங்கள், இரண்டு பட்டியல்களிலும் இருக்கின்ற பணிகள் எதெது என்று அடையாளம் காணுங்

கள். அதுதான் உங்கள் சுயதருமம், சுயகருமம், சுபாவம். ஆக, உலக நன்மைக்கான, பரோபகாரத்துக்கு உதவும், புலனடக்கத்துக்குத் தூண்டும் எந்த நல்ல காரியம், உங்கள் மனத்துக்கு, அதிகச்சிரமமின்றி, எளிதில் அல்லது சிறிது முயற்சியுடனேயே செய்ய வல்லதாக உங்களுக்குத் தோன்றுகிறதோ, மனப்பூர்வமாக உணரும்படி உங்களைச் செய்கிறதோ அதுதான் உங்கள் ஆன்மீக வளர்ச்சியில் முதற்படி. அந்த சுயதருமத்தை ஒதுக்கிவிட்டு நீங்கள் வாழ்க்கையில் எந்த நற்பணியையும் செய்ய முடியாது.

இந்த சுயதருமம், மனிதன் பலபிறவிகளில் செய்த நற்கருமங்களின் பின் விளைவாக அவனுக்குக் கிடைக்கும் ஒரு நல்வாய்ப்பாம். அது அவனுடைய பல நன் முயற்சிகளின் ஒட்டு மொத்தமான உருவமாகும். இப்பிறவியில் அவனுடைய முயற்சி, பயிற்சி இவற்றின் வடிவமாகும். பக்தனுடைய, இன்றைய சமூகச் சூழ்நிலையில் அவன் இப்படி நடந்து கொள்ள வேண்டும் இதை செய்யக்கூடாது என்றும் இவ்வளவு தான் செய்யமுடியும் என்றும் சுட்டிக் காட்டுவது சுயதருமம். அர்ச்சுனனுடைய, பல பிறவிகளின் சம்ஸ்காரங்களினாலே, அவனுக்குத் தீமையை எதிர்த்துப் போராடுகின்ற வலிவும், துணிவும், வீரமும் பிறவிப்பயனாகக் கிட்டின. தன்னுடைய முயற்சியினாலும், துரோணர், பீஷ்மர் முதலியோரிடம் பெற்ற பயிற்சியினாலும் ஒரு வீரனாக அவன் ஆனான். தீமையை எதிர்த்துப் போராடுகின்ற செயலூக்கம் அவன் ரத்தத்தில் ஊறிப்போயிற்று. சிவபெருமானை நோக்கித் தவம் செய்ய இமய மலைக்குச் சென்ற போதும் கூட அவன் பாசுபதாஸ்திரத்தை அல்லவா நாடிப் பெற்றான்! அவனுடைய இன்றைய கடமை என்ன? இன்றைய சமூகச் சூழ்நிலையில் அவன் தருமத்தின் கட்சியில் நின்று போராட வேண்டும். பாஞ்சாலியை அவமானம் செய்தவர்கட்கு தண்டனை அளிக்க வேண்டும். அவனை நம்பித்தான் தருமனும் போரில்

இறங்கினான். அப்படிப்பட்ட அர்ச்சுனன் இந்த இக்கட்டான தருணத்தில் தன் சுயதருமத்தை விட்டுச் சன்னியாசியாகப் போய் விடுகிறேன் என்றால் என்ன அர்த்தம்? இப்போது அர்ச்சுனன் காவி உடுத்து உலகைத் துறந்தாலும், அவன் ஒரு வீரனாகவே மிளிர்வான். உள்ளத்து வீர உணர்வுகள் ஒடுங்காத நிலையில் அவன் தவம் ஒரு போராட்டமாகவே முடியும். ஆனால் இன்றைய தரும யுத்தமோ அர்ச்சுனனுக்கு அவன் உடல், மன, அறிவுச் சக்திகட்கு ஒரு வடிகாலைத் தேடித் தரும் ஆன்மீக சாதனையாக அது மிளிரும். ஆக சுயதருமத்தைப் பேணுவது ஒன்றுதான், மனிதனின் ஆன்மீக சக்திகளே வளர்க்க உதவும் என்பது கண்ணன் கருத்து. அர்ச்சுனனின் சுயதருமம் போரிடுதல். ராமனின் சுயதருமம், எளியவர்களைக் காத்தல். சிபியின் சுயதருமம் துன்புற்றவர்கட்கு இரங்கித் தன்னையே தருதல். புறாவைக் காப்பாற்றுவதற்காக, சிபி பருந்துடன் போரிடத் துவங்கினால் என்ன ஆகும்? சிபியின் உடலில், மனத்தில் மூச்சில், அறிவில் ஒடுங்கிக் கிடக்கிற சக்திகட்குத் தியாகம்தான் வடிகால். போர் வடிகால் ஆகாது, அர்ச்சுனனின் உடலில் ஒடுங்கிக் கிடக்கிற சக்திகட்குப் போர்தான் வடிகால். சன்னியாசம் வடிகால் ஆகாது. மீராவின் சுயதருமம்பாடல்பாடுவது. கபீரின் சுயதருமம் நற்கவிதைகள் பாடுவது. இந்தசுயதருமம் தான், சமுதாயத்தின் கண்களில் குறையுள்ளதாகத் தோன்றினாலும், சிறப்புடையது. மற்ற தருமம், பரதருமம் பயத்தைத் தருவது. உனக்கும் உன்னைப் படைத்தவனுக்கும் உள்ள ஒரே தொடர்பு, தொப்புள் கொடி இந்த சுயதருமம்தான் என்கிறது கீதை. இறைவனுக்கும் அதன்மூலம் தான் பூஜை செய்ய முடியும். அந்த ஒரு பூஜைதான் மனப்பூர்வமான பூஜை என்கிறது கீதை.

''யாரால் உயிர்கள் படைப்புற்றிடுமோ
யாரால் உலகம் நிறைவுறுமோ
அத்தனி ஈசனை தத்தம் வினையால்
மாந்தர் வணங்கி நலமுறுவார்'' (18-46)

என்று ஓரிடத்தில் பேசுகிற கீதை, தொடர்ந்து

நிறைவோடாற்றும் பரதர்மத்திலும்
குறையுள தன்னறம் மேலாகும்
இயற்கைக் கேற்பத் தனக்கே உகந்த
தொழிலைச் செய்பவன் கேடெய்தான் (18-47)

என்றும் ஆசுவாசமளிக்கிறது.

## அத்தியாயம் 5: **பிரகாரம்**

மனிதன் தன் சுயதருமத்தை, சுய கருமத்தைப் பற்றி ஒழுகுகின்ற போது, அவனுக்குத் திசை காட்டிய, கலங்கரை விளக்கமாக யாரைக் கொள்வது? ஜகத்குருவாக வணங்கப்படுகின்ற கண்ணன் இதற்கு வழி சொல்லுகின்றான்.

எதைச் செய்வது, எதைச் செய்யக் கூடாது என்ற கேள்வி வருகின்றபோதும், கருமம் எது, கருமமற்ற நிலை எது என்ற கேள்வி வரும்போதும் அறிஞர்கள் கூடக் குழம்பிப்போகின்றார்கள். எதை அறிந்து அசுபத்திலிருந்து மனிதன் விடுதலை அடைவானோ, அந்தக் கருமத்தை உனக்கு நான் சொல்கிறேன் என்று கண்ணன் உரைக்கின்றான்.

ஒவ்வொருவருடைய ஆன்மாவிலும், இதயத்திலும் நம் செயல்களைச் சரி செய்கின்ற, சரி பார்க்கும் கருவி இருக்கின்றது. நல்ல கருமங்களைச் செய்வதன் மூலம், புண்ணிய கருமங்களைச் செய்வதன் மூலம் சித்தசுத்தி ஏற்பட்டு புத்தி தெளிந்து உள்மனம் நல்ல அறிவுரையை நமக்குத் தரும்.

வழி துலங்கும், ஆகவே மனிதனின் ஒரு குரு அவன் மனச்சாட்சியே, தெளிந்த அறிவே, கருமத்திலிருந்து பிறந்த ஞானமே. சம புத்தியினரையே சரண் புகுவாய் நீ (2/49) என்பது கண்ணன் வாக்கு.

அது மட்டுமல்ல, வாழ்க்கையில் நாம் எதிர் கொள்ளுகின்ற பிரச்சினைகளை, தரும சங்கடங் களை நமக்குமுன் பலர் எதிர்நோக்கி இருக்கிறார் கள். வாழ்க்கை எனும் பாற்கடலைக் கடைந்து துக்கம் என்ற ஆலாஹால விஷத்தையும் இறை யருள் என்ற அமுதத்தையும் தரிசனம் பண்ணி இருக்கிறார்கள். அவர்கள் உழைப்பின் லாபம் நமக்குக் கிடைக்க வேண்டும் என்கிறான் கண் ணன். அவர்கள் தவத்தில் நமக்கும் பயன் விளை யும். அத்தகைய ஞானிகளை நாம் சரண்புக வேண்டும். அவர்கட்குத் தொண்டு புரிய வேண்டும். அவர்களிடம் பொருத்தமான கேள்விகளைக் கேட்க வேண்டும். அர்ஜுனன் கண்ணனை வினவியதைப் போல, நசிகேதன் யமனைக் கேட்டதுபோல, தரும புத்திரன் வியாசனைக் கேட்டது போல, ராமன் வசிட்டனைக் கேட்டது போல, அறிவுள்ள, ஞானம் தருகிற, தனிப்பட்ட சாதகனுக்கு மட்டும் பயன் படாமல் உலகில் உள்ள சாதகர்கள் அனைவருக் கும் பயன்படுகின்ற உன்னதமான கேள்விகளைக் கேட்க வேண்டும். இறைவனை தரிசித்த அந்த ஞானிகள் உபதேசம் செய்வார்கள் என்று கண் ணன் கூறுகின்றான்.

பணிந்தும் கேட்டும் சேவை செய்தும்
முறையாய் அதனை அறிந்திடுவாய்
இறை ஒளி கண்ட ஞானியர் உனக்கு
ஞான அமுதை அருளிடுவார் (4/34)

ஆக வாழ்க்கையில் நமக்குப் பிரச்சினைகள் எதிர்ப்படும்போது நம் மனச்சாட்சி, தெளிந்த அறிவு நமக்கு வழிகாட்டும். இறைவனை நேரில் கண்ட

ஞானிகள் நம்மை அறிவுறுத்துவார்கள். இந்த இரண்டுடன் சேர்ந்து மூன்றாவது வழி ஒன்றும் உண்டு. அதுதான், ஞானியரும், பக்தரும், யோகியரும், தம் அனுபவங்களை, நூலாக, சாத்திரமாக, உபதேசமாக, இசைப்பாடலாக விட்டுச் சென்றிருப்பது. இவை பொதுவாக, சாத்திரம் என்று கூறப்படும். அறிஞர்களை, ஞானிகளை நேரில் சந்தித்து உரையாடி லாபம் பெறுவது போலவே அவர்கள் நூல்களை ஓதியும் சாதகன் பயன் பெறலாம், தெளிவடையலாம். இந்த சாத்திரம் ஓதுதலாகிய கருமம், தனிமையையும் சத்சங்கத்தையும் ஒருங்கே தரவல்லது. தனிமையின் இனிமையையும், சங்கத்தின் லாபத்தையும் ஒரேசமயத்தில் காணவேண்டுமா? அதற்கு நன்னூல் ஓதுதல் ஒன்றே வழி. குரு வாழ்ந்த காலத்தையும் கடந்து நிற்பதன்றோ சாஸ்திரம்?

செய்யத் தகுந்த காரியத்தையும், விலக்கத் தகுந்த காரியத்தையும் காட்டித் தருவது சாத்திரமே. அதுவே பிரமாணம், அதை நாம் நம்பி உயிர் வாழலாம். அதை நம்பி உயிரையும் விடலாம்.

> ''எனவே சாஸ்திரம் உனக்காதாரம்
> நன்மை தீமை வகுப்பதினால்
> சாஸ்திர விதியின் நெறியினை அறிந்து
> கர்மம் செய்தல் உன் கடனாம்'' (16/24)

என்கிறான் கண்ணன்.

அப்படிப்பட்ட லக்ஷ்ய சாஸ்திரம், பிறழாத சாஸ்திரம், நம்பத்தகுந்த சாஸ்திரம் லக்ஷிய குருவின் வாயிலிருந்து வருகின்ற ஆதரிச சாஸ்திரம் வேறெது? கண்ணன் தந்த கீதையேதான். கீதையை வைத்துக் கொண்டு என்ன பண்ணுவது? அதற்கும் கண்ணன் விடை தருகின்றான். ''தன் கடமையை ஆற்றி நிறைவுறுதலே'' கீதை படிப்பதன் லக்ஷியமாம்.

''பாவமிலானே இவ்வாறுனக்கு
மாபெரும் ரகசியமறை தந்தேன்
அர்ஜுனா இதனை அறிவோன் ஞானி
தன் கடன் ஆற்றி நிறைவுற்றோன்'' 15 (20)

இவ்வத்யாயத்தில் இதுவரை கூறிய கருத்துக்களைத் தொகுத்துரைப்போம்.

1. மனச்சாட்சி அல்லது கருமம் செய்வதால் வரும் தெளிந்த ஞானம். 2. இறைவனை தரிசனம் பண்ணின குரு 3 குரு ஓதீன சாஸ்திரம். 4. கண்ணன் தந்த பகவத்கீதை. இவை செய்யத்தகுந்த கருமம் எது, விலக்கத்தகுந்த கருமம் எது என்பதை மனிதனுக்கு உணர்த்தும். கருமம் எது ஓய்வு எது என்று சாதகனுக்குக் காட்டும்.

இந்நூலில் இதுவரை கூறிய கருத்துக்களைத் தொடுத்துரைப்போம்.

1. மோக்ஷத்தை விரும்புகின்ற சராசரி சாதகன் அகர்மத்தைவிட, கர்மம் செய்தலையே சிறந்த வழியாகக் கொள்ள வேண்டும்.
2. தன் ஸ்வதர்மம், சுயகருமம், சுபாவம் இவற்றைப் பின்பற்றிக் கருமம் புரிய வேண்டும்.
3. சாஸ்திரங்களை, குருவை, மனச்சாட்சியை பின்பற்ற வேண்டும். கீதையைப் பின்பற்ற வேண்டும்.

## அத்தியாயம் 6: அதிகார நந்தி

செயல்புரிய வேண்டும், தன்னுடைய சுய தருமத்தையே ஆற்ற வேண்டும், சாஸ்திரங்களை, குருவை, மனச்சாட்சியைப் பின்பற்ற வேண்டும் என்று சொல்லிய பிறகு, கண்ணன் ஒரு சாதகன் தன் தொண்டினை எப்படி இயற்றுவது என்றும்

சொல்லுகின்றான். சுய தருமத்தைப் பின்பற்ற வேண்டும் என்பதால் விதிவசப்பட்டு சிறைப்பட்டு விட்ட உணர்வுடன் விதியே என்று கடமையாற்று வது கீழ்மக்கள் இயல்பு. கர்மத்தின் பலனைத்துறக்க வேண்டுமென்பதனாலே கடனே என்று அலட்சிய மாகப் பணியாற்றுவதும் கீழ்மக்களின் இயல்பே. தன்னை உயர்த்திக் கொள்ள விரும்புகின்ற மனி தன் கர்மத்தைக் கர்மயோகமாக செய்ய விரும்பு கின்ற மனிதன் கர்மம் புரிவதை வாழ்க்கையில் தன்னை உயர்த்திக் கொள்வதற்கு கிடைத்த சந் தர்ப்பமாகக் கருதி, கர்மத்தை நன்றாகப் புரிந்து, கர்மச்சிறையினின்று விடுபடுவதே இறைவனை அடையும் வழியாகும் என்றுணர்ந்து திறமையுடன் கர்மம் புரிவான். ஆகவே திறமையுடன் கர்மம் புரியவேண்டுமென்பது நான்காவது உபதேசமாகும்.

திறமையுடன் கர்மம் புரிவது எப்படியென்பதை கண்ணன் விளக்குகின்றான். அதை 17-வது அத் தியாயத்தின் 13-வது சுலோகத்தில் விளக்கு கின்றான்.

விதி நெறிக்(கு) அயலாய்ச் செய்யும் வேள்வி யும்
மந்திரம் தானம் அற்றதுவும்,
அதுபோல் தக்ஷிணை இல்லா வேள்வியும்,
சிரத்தை அற்றதும் தாமஸிகம்

—எதிர்மறையில் சொல்லப்பட்டிருக்கும் இப் பாடலை உடன்பாட்டு நெறியில் வருவித்துக் கொண்டால், சாத்வீக கர்மமானது, 1) விதிநெறிக்கு அப்பாற்படாததாகவும், உற்பத்தித் திறனைக் கொண்டதாகவும், மந்திரம் உடையதாகவும், தியா கம் கொண்டதாயும், நம்பிக்கையை வளர்ப்பதாக வும், இருக்க வேண்டும். இப்படிப்பட்ட கர்மமே சாத்விக கர்மமாகும்.

**விதிக்கு உட்பட்ட செயல்**

எந்தக் கர்மமும் அதை எப்படி செய்வதென்ற விதிக்குட்பட்டு செய்யப்பட்டால் தான் அதில் அழகும் பயனுமிருக்கும். அதன் பயனும் சமுதாயத்திற்குக்கிட்டும், உதாரணமாக, கால்பந்து விதிகளை பின்பற்றி கூடைப்பந்து ஆடலாகாது. விளையாட்டு மைதானத்தின் விதிகளை அணுமின்சக்தி கேந்திரத்துள் பின்பற்ற கூடாது. ஒவ்வொரு பணிக்கும் ஒவ்வொரு இடத்திற்கும் வெவ்வேறு விதிகளும் நெறிகளும் உண்டு. அவற்றைப் பின்பற்றிக்கர்மம் புரிந்தால் மட்டுமே நமக்கு முன் சென்ற ஆன்றோர் நெறியில் நிற்க தொண்டனால் முடியும்.

**உற்பத்தித் திறன்**

ஒரு செயல் கர்மயோகமாக ஆவது எப்போது? அதைச் செய்பவனுக்கும் சமுதாயத்திற்கும் பலன் தருவதாக லாபம் பெற்றுத் தருவதாக அச்செயல் இருக்க வேண்டும் இல்லையேல் அச்செயல் வெறும் உடற்பயிற்சியாக நின்று விடும். வெற்றி யென்பதைப் பற்றி ராஃல்ப் வால்டோ எமர்சன் கூறும்போது வெற்றி என்பது ஒரு நல்ல பூந்தோட்டத்தையோ ஒரு நல்ல புத்தகத்தையோ அறிவுள்ள குழந்தைகளையோ, உலகத்திற்கு விட்டு செல்வது சமுதாயத்தைச் சீர்திருத்தி விட்டுச்செல்வது, நீ வாழ்ந்தாய் என்பதனால் இவ்வுலகில் ஒரு மனிதரேனும் சுலபமாக மூச்சுவிட்டார் என்றெண்ணும்படி வாழ்வது என்று கூறியிருக்கிறார். ஆகவே எதையாவது சாதிக்கின்ற கர்மம் எதையாவது வளர்க்கின்ற கர்மம், எதையாவது திருத்துகின்ற கர்மம், யாருக்காவது லாபமோ பயனோ தருகின்ற கர்மம் இதுவே கர்ம யோகமாக மாற முடியும். ஆகவே திறமையுள்ள கர்மம் என்பதற்குக் கண்ணன் அன்ன சிருஷ்டியுள்ள கர்மம், பயனை விளைவிக்கும் கர்மம் என்று பொருள் கொள்கிறான்.

**மந்திரம்**

ஒரு கர்மத்தை, மாபெரும் செயலை, மனித குலத்தை உயர்த்துகின்ற பணியை, நாட்டை நிமிர்த்தி வைக்கின்ற வேள்வியை தன்னைத்திருத்திக் கொள்கின்ற யக்ஞத்தை ஒரு சாதகன் புரியும் போது அக்கர்மம் முழுவதையும் பலப்பல துண்டுகளாகப் பிரித்துப் பல நாட்களிலோ, அல்லது பல பேர்களின் உதவியாலோ செய்யவேண்டிய கட்டாயம் எற்படுகிறது. மாபெரும் செயல் ஒன்று துண்டுகளாகப் பிரிக்கப்படுவதனால் அந்தக் காரியம் முழுவதையும் ஒரே சமயத்தில் பார்த்து அதன் புற உருவம், வெளிவட்டம் தான் விரும்பியபடி உள்ளதா என்று உறுதிப்படுத்திக் கொள்ள சாதகனால் சில சமயம் முடியாமற்போய் விடும். மரங்களைப் பார்க்கின்ற மனிதன் காட்டைப் பார்க்கத் தவறிவிடலாம். மனிதர்களைப் பார்க்கின்ற சாதகன் மனித குலத்தைக் காணத் தவறிவிடலாம். ஆடுகளைப் பார்க்கின்ற மனிதன் மந்தையைப் பார்க்கத் தவறிவிடலாம். ஆனால் தான் புரிகின்ற கர்மத்தின் முழுவடிவமும் தன் இலட்சியத்தின் பூரண உருவமும் அவன் மனக்கண் முன் நிற்குமானால் ஒருபெரிய காரியத்தின் சிறுசிறு உட்பகுதிகளை, அவயவங்களைக் கண்டு கொண்டிருக்கும் போதுகூட, முழுவரைபடமும் அவன் முன்னின்று அகலாது. இதற்கு உதவுவது செயலின் முழுமையைப் பற்றி அவன் மனத்தில் எழுதப்பட்ட வரைபடமாகும். இதுவே மந்திரம் என்று இச்சுலோகத்தில் குறிக்கப்பட்டுள்ளது.

இப்படி மந்திரம் என்பது ஆட்டை மந்தையுடன் இணைப்பதாய் மரத்தை காட்டுடன் இணைப்பதாய் தனிமனிதனை மனித குலத்துடன் இணைப்பதாய், சிறு பகுதியை செய்து கொண்டிருந்த போதிலும் முழுக் கர்மத்தையும் உணர்த்துவதாய் இருக்கின்றது. மந்திரமில்லையேல் ஒரு முழுமையான செயல் சிறுசிறு துண்டுகளாக சிதறிப் போகும். ஒரு மோட்டார் வண்டித் தொழிற்சாலையின் சிறுசிறு

பகுதிகளை உருவாக்குகின்ற ஒரு தொழிலாளி, தான் ஒரு மோட்டார் வண்டியை உருவாக்குவதாக உணரமாட்டான், தான் பகுதிளையே உருவாக்கு வதாகவே நினைத்துக் கொள்வான். ஆகவே முழு மையை உணர்த்தும் அறிவு என்பதே திறமையாகச் செயல் புரிவதற்குத் தேவையான மூன்றுவது நிபந் தனையாகும்.

**தட்சிணை**

மதம் என்பது, ஆன்மீகம் என்பது, சாதனை என்பது, யோகம் என்பது, அனைத்துமே தியா கம் என்ற பெரும் செயலின் வெவ்வேறு திருநா மங்களே.ஆகவேதான் தியாகத்தினாலே அமுதத்தை அடைவாய் என்றும், தியாகம் புரிந்து இன்பம் துய்ப்பாய் என்றும் வேதங்கள் சொல்லுகின்றன. அதனால் தியாகம் புரிவது, தானம் கொடுப்பது, பொருளை இழப்பது, செலவை ஏற்றுக் கொள்வது, இவை திறமையுடன் புரியப்படும் செயலுக்கு இன் றியமையாத துணைகளாகும். இப்படிப்பட்ட தியா கம் உடலால் செயல் புரிவதும், உடல் துன்பத்தை பொறுத்துக் கொள்வதுமாகவும் இருக்கலாம். மற்ற வர்கட்கு பொருளை தானமாகக் கொடுப்பதும், நஷ் டத்தை சகித்துக் கொள்வதுமாகயிருக்கலாம்.

மனத்தால் மற்றவர்களுக்கு நன்மையே நினைப் பதும், நற்காரியம் செய்யும்போது தனக்கு விளை யும் மனத்துன்பத்தை சகித்துக் கொள்வதுமாகவும் இருக்கலாம். தன் அறிவை சமுதாயத்திற்குப் பயன் படுமாறு செய்வதாயும் இருக்கலாம். இவையனைத் தும் தியாகம், தானம் அல்லது தட்சினை என்று கண்ணனால் அழைக்கப்படுகிறது. திறமையுடன் கர்மம் புரிவதற்கு இவை மிகமிக அவசியமாகும்.

**சிரத்தை அல்லது நம்பிக்கை**

மனித குலத்தின் நன்மையையும் தன்னுடைய ஆன்மீக உயர்வையையும், கடவுளின் கைக்கருவி

யாகத் தான் ஆகிவிடும் ஆசையையும் கொண்டு சாதகன் தொண்டு புரிகிறான். அப்போது அவனுடைய நற்காரியங்களுக்கும் பலன் உடனே கிட்டி விடுவதில்லை. எல்லோரும் இளநீர் பருக வேண்டுமென்று ஒருவன் தென்னையை நடுகிருன். தென்னை வளர்ந்து மற்றவர்களுக்கு இளநீர் கொடுக்க ஏழு வருடங்களாகும். ஆனால் இன்றைக்கோ, கையில் இருந்த ஒரு தேங்காயும் போயிற்று. ஏழு வருடங்களுக்குப் பிறகு மற்றவர் களுக்கு நன்மை தருமென்று எண்ணி இன்றைக்குக் கையிலிருக்கும் ஒரு தேங்காயை இழப்பதற்கு மனிதனைத் தூண்டுவது எது? அதுவே மனிதனிடத் திலும் இயற்கையின் விதியிலும் கடவுளின் தவறாப் பெருங்கருணையிலும், தன்னுடைய வளர்ச்சியிலும் சாதகன் கொண்டிருக்கின்ற நம்பிக்கை, சிரத்தை ஆகும். இது இல்லையேல் நீண்டகால காரியம் எதையும் மனிதன் செய்ய இயலாது.

ஆக செயல்விதிகளைப் பின்பற்றுதல் பயன் உடைய செயலைச் செய்தல் தான் புரியும் நற்காரியங்கள் பற்றி உணர்வு பெற்றிருத்தல், தியாகம் ஊடுறுவி நிற்கும் கர்மத்தைப் புரிதல், ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருத்தல் இவ்வைந்தை யும் கொண்டு சாதகன் திறமையுடன் கர்மம் புரிந்து மனிதனைப் பிணைக்கின்ற கர்மத்தை, மோட்சத்தை அடைய உதவும் கர்மயோகமாக மாற்ற கண்ணன் அறிவுரை நல்குகிறான்.

## அத்தியாயம்—ஏழு—நிவேதனப் பொருள்

பயனுள்ள கருமத்தையே புரியவேண்டுமென்றும், அதனுல் விளைந்த பூரணமான, அழகிய, சுவையும், ரசமும் ததும்பும் பயனை, பழத்தை முழுமையாகத் தியாகம் புரிந்து விட வேண்டுமென்றும் கண்ணன் கட்டளையிடுகின்றான்.

விணையே புரிதல் உன் கடனுய்க்கொள்
பலனில் உரிமை உனக்கில்லை
வினைப்பயன் தருவோன் ஆதலும் வேண்டாம்
விணையற்றிருக்கவும் விரும்பாதே. (2-47)

பகவத் கீதையின் முக்கியமான உபதேசங்களில் ஒன்று ''கர்மத்தை செய் பலனைத் துறந்து விடு'' என்பதாகும். இதைக் கண்ணன் பல்வேறு காரணங்களைக் காட்டி விளக்குகிருன். சாதாரண மக்களுக்கு, பாமர மக்களுக்கு ஒரு பணியைச் செய்தால் பழம் கிடைக்கும், கூலி கிடைக்கும், பேரும் புகழும் உண்டாகும் என்றெல்லாம் தோன்றுகிறது. அவர்கள் கடமையை ஆற்றுவதற்கு லாபத்தில் வைத்த ஆசையே தூண்டுகோலாக இருக்கின்றது. இத்தகைய மக்களை ''இராஜச கர்மம்'' புரிவோர் என்று கண்ணன் குறிப்பிடுகின்ருன். மற்ருெரு வகையினரோ கர்மமே புரியாமல் கடமையைத் துறந்து சோம்பியிருக்கின்றனர். இவர்கள் தாமச குணம் உடையவர்களாவார்கள். கடமையை நன்ருகச் செய்வேன் பலனை விளைவிப்பேன் ஆனுல் பலன் முழுவதற்கும் நானே உரிமை கொண்டாடுவேன் என்று சொல்லுவது இராஜச குணம், அசுர குணம். பலனில் உரிமை வைக்கக் கூடாதா, அதில் எனக்கு அதிகாரம் இல்லையா அப்படியானுல் தொழிலே புரியமாட்டேன், கர்மமே ஆற்ற மாட்டேன், கடமையை விட்டு வழுவுவேன் என்று சொல்லுவது தாமச குணமாம். ஆனுல் சாத்விகனே இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட ஆக்க பூர்வமான மனநிலையை உடையவன். அவன் பலனில் விருப்பமுள்ளவனைப் போல, பழத்தில் ஆசையுள்ளவனைப் போல விணையாற்றுவான். ஆனுல் கடமையை ஆற்றாதவனைப் போல பழத்தில் தனக்கு உரிமையின்மையை உணர்ந்திருப்பான். இராஜசகுணம் உடையவனைப் போல பணியாற்றுவான். தாமசகுணம் உடையவனைப் போல பலனைத் துறப்பான், இவனே சாத்விக செயல் புரிபவன் ஆவான். இவனை கீதை,

பற்றும் அகந்தையும் நீங்கப் பெற்றோன்
உறுதியும் ஊக்கமும் நீங்காதோன்,
வெற்றி தோல்வியால் சற்றும் மாறான்
அவனே ஸாத்வீக கர்த்தாவாம் 18(26)

என்கிறது. இப்படியாகச் சாத்வீகக் கர்மம் புரியும்படி, செயலை அழகுறச் செய்த பின்னும் விளைகின்ற பயனை முற்றும் துறக்கும்படி ஒரு ஸாத்வீகத் தொண்டனைத் தூண்டுவது எது? இது பகவத் கீதையின் மையக்கருத்தாம். ஒருவன் திறமையுடன் செயல்புரிகிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்படிச் செயல் புரியும் திறமை அவனுக்கு எங்கு இருந்து வந்தது? அவன் தன்னைச் சுற்றியுள்ள இயற்கையினின்று, பஞ்ச பூதங்களினின்று, உயிர்ச் சக்தியை உறிஞ்சிக் கொண்டு தன்னைக் கொழுக்க வைத்துக்கொண்டான். மண்ணினுள் உள்ள நறு மணத்தையும், தீயினுள் உள்ள ஒளியையும், நீரில் உள்ள சுவையையும், வானில் உள்ள ஒலியையும் காற்றில் உள்ள உயிர்ப்பையும்; எடுத்துக் கொண்டு தன்னை உருவாக்கிக் கொண்டான்.

இப்படி இயற்கையைச் சுரண்டித் தன்னை வளர்த்துக் கொண்ட மனிதன், புற உலகை அமுக்கடித்து, சுரண்டி, தேய்த்து தான் வளர்ந்த மனிதன் இயற்கையைத் தூய்மைப் படுத்துகிற, வளமுறச் செய்கிற அழகும், ஒளியும் பெறச் செய்கிற எந்த நல்ல காரியத்தையாவது செய்தானால் அதற்கு கூலி கேட்க, பலனில் உரிமை வைக்க அவனுக்கு என்ன அதிகாரம் உள்ளது? ஆக இயற் கையைச் சுரண்டி வாழும் மனிதன், இயற்கைக்குத் தொண்டு செய்யும் போது, தான் வாங்கிய கடனைத் திருப்பி தருகிறானே தவிர, கூலிக்கோ, பழத் திற்கோ, பலனிற்கோ, எஜமானனாகயிருப்பதில்லை. ஆக இயற்கையில் இருந்து ஏற்கனவே பலனைப் பெற்று விட்ட மனிதன் தன் நன்றிக்கடனை இயற்கைக்குச்செலுத்துகின்ற பணிதான் கர்ம யோகமாகும், வேள்வி அல்லது யக்ஞமாகும்.

அதைப் போலவே மனிதன் உயிருள்ள இந்த மனித சமுதாயத்திலிருந்து பல உதவிகளைப் பெற்றிருக்கிறான். நான் சிறு குழந்தையாக இருந்த போது மற்றவர்களுக்குத் துன்பம் தந்தேன். மற்ற வர்கள் எனக்காக உழைத்தனர். நான் இரவில் கதறி அழுது மற்றவர்கள் தூக்கத்தைக் கெடுத்தேன். மற்றவர்கள் என்னைப்பார்த்து புன்னகைத்தால் திருப்பி இன்முகம் காட்டத்தெரியாத பேதையாக இருந்தேன். அப்போதும் கூட இச்சமுதாயம் பயனற்றவன் என்று என்னை ஒதுக்கி விடாமல் என்னிடம் பேரன்பு காட்டிற்று, என்னைப் பேணி வளர்த்தது. நான் என்னுடைய ஆரோக்கியத்தை அலட்சியம் செய்து கண்டதையெல்லாம் தின்றேன். எனக்கு வயிற்றுவலி வந்தது, மருத்துவரிடம் போனேன். அவர் மருந்து தந்தார். நானும் குண மானேன். எனக்குச் சில நிமிடங்கள் உதவி புரிவ தற்காக அந்த மருத்துவர் பல்லாண்டு காலம் பயின்று இருந்தார். இப்படி இச்சமூகத்தினரின் உழைப்பை, அன்பை, நேரத்தைப் பயன்படுத்தி வளர்ந்த நான் இப்போது மற்றவர்களுக்குப் பயன் படுகிற ஏதோ ஒரு பணியைச் செய்யும் திறமையைப் பெற்றுவிட்டேன். ஏற்கனவே உதவியைப் பெற்று விட்ட நான், கூலியை வாங்கிக் கொண்ட நான், இப்பொழுது செய்கின்ற பணிகளுக்காக இன்னொரு தடவை கூலியை எதிர்பார்ப்பது என்ன நியாயம்? அதனால் பலனில் பற்றற்று உரிமை கொண்டாடாமல், சமூகத்தில் உள்ள மற்றவர்களுக்கு உதவிபுரியக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

இப்படி இயற்கையிடமிருந்து தான் பெற்ற உதவிகளுக்கு நன்றிக் கடனாக இயற்கைக்குப் பணிவிடை புரிதலே யக்ஞம் அல்லது வேள்வி ஆகும். மனித சமூகத்திடமிருந்து நான் பெற்ற உதவிக்கு நன்றிக்கடனாக பணிவு மிகுந்தவனாக இச்சமூகத் தினருக்கு நான் செய்கின்ற சேவை தானம் எனப் படும். இதுபோலவே இந்த என்மனம் என்அறிவு,

என் உடல், என் பிராணன் இவை நான்கும் என் ஆன்மாவுக்கு புறம்பானவையே. ஆனால் நானே என் ஆன்மாவை அடையாளம் கண்டு கொள்ள புலன்கள். பிராணன், மனம், அறிவு ஆகிய நால்வகைக் கருவிகளைப் பயன்படுத்திக் கொண்டேன். இக்கருவிகளுக்கு நியாயமான உணவு, நல்ல சுவாசம், நல்லுணர்வு நற்சிந்தனை இவற்றைத் தருவதன் மூலம் கடனைக் கழித்தல் தவமாகும். இவ்வாறு மனிதன் கர்மம் புரிகின்ற போது தான் ஏற்கனவே வாங்கிய கடனைத் திருப்பியளிப்பவனாகவே மட்டுமேயிருக்கிறானேயொழிய, இன்னொரு தடவைகூலி பெறும் அதிகாரம் உடையவனாயிருப்பதில்லை. ஆகவேதான் கண்ணன் வினையே புரிதல் உன் கடனாய்க்கொள், பலனில் உரிமை உனக்கில்லை என்று கூறுகின்றான்.

பலனைத் துறப்பதற்கு இன்னுமொரு நியாயத்தையும், கண்ணன் கூறுகின்றான். இந்த மனிதப் பிறவி எத்தனையோ பிறவிகளில் நாம் புரிந்த வினைகளின் பயன் வாங்கிய கடன்களைத் திருப்பித்தர கடவுளால் தரப்பட்ட ஒரு நல்வாய்ப்பு, நம் வாசனைகள், சம்ஸ்காரங்கள் இவற்றைக் கழித்துக்கட்ட நமக்கு அளிக்கப்பட்ட ஒரு சந்தர்ப்பம். அதனால் பலனைத் துறக்கத் துறக்க வாசனைகளும், சம்ஸ்காரங்களும் குறைந்து கொண்டே போகின்றன. நம் செயல்கள் வேள்வியாகி, தானமாகி தவம் ஆகி நம்மைத் தூய்மைப்படுத்துகின்றன. மூன்றாவதாக அழகிய ஒரு காரணத்தைச் சொல்லிப் பலனைத் துறக்கும்படி கண்ணன் நம்மைத் தூண்டுகிறான். இனிமை என்பது செயலிலேயே ஒளிந்திருக்கிறது. செயலின் பின் விளைவாகிய பயன் அல்லது பழம் நாம் செய்கின்ற செயலில் பொதிந்து கிடக்கின்ற அழகு, அன்பு, சத்தியம் திறமை, தைரியம், விடா முயற்சி இவற்றின் ஒரு வெறும்புற அடையாளமேயாகும். நாமெல்லாம் இங்கு கூடியிருக்கின்றோம். நமக்கு நல்ல லட்டுக்களைப் பரிமாற வேண்டுமென்று

நம் சமையலறை நிர்வாகி விரும்புகின்றார். சாமான் வாங்கக் கடைக்குப் போகின்ருர். கடைக்காரர் ''கீதை படிக்கின்ற பக்தர்களுக்கு லட்டு பரிமாறும் யோசனையா?'' என்று கேட்டு நல்ல தரமான கடலே மாவையும், சீனியையும், நெய்யையும் எடுத்துத் தருகின்ருர். சாமான்களைப் பெற்றுக் கொண்ட சமையல்காரர் கீதை படித்தபிறகு பிரசாதமாக இந்த லட்டு தரப்போகிறார்களா? அப்படியானால் முந்திரிப்பருப்பை கொஞ்சம் அதிகமாகவோ போடு என்று தன் அன்பைக் காட்டுகின்றார். பூந்தியை லட்டாக பிடிக்கின்ற துணைச் சமையல்காரர் நாளெல்லாம் பிரவசனத்தைக் கேட்டு கேட்டு பக்தர் கள் களைத்திருக்கின்றார்கள். கொஞ்சம் பெரிய லட்டுவாகத் தான் பிடித்துப் போடுவோமே என்று தன் அன்பைக் காட்டுகின்ருர்.

பக்தர்கள் சாப்பிட உட்கார்ந்தாயிற்று. பரிமாறு கின்ற சகோதரி தன் பக்தியைக் காட்டும் முகவாக பாகவதர்களுக்கு ஒன்றுக்குப் பதிலாக இரண்டிரண்டு லட்டுகளாகப் போட்டு விடுகின்ருர். ஆக நம் இலை யில் வந்து விழுகின்ற லட்டு, மாவு விற்ற கடைக் காரரின் கருணே, சமையல்காரரின் திறமை அவர் நம்மீது வைத்த அன்பு, லட்டுபிடிப்பவனின் பக்தி யுணர்வு, பரிமாறுகின்ற சகோதரியின் பாசம், இவற்றின் ஒரு அடையாளச் சின்னமாக மாறி விடுகின்றது. பண்பும், மனமென்மையும் உள்ள ஒருவன் லட்டுக்களே உருவாக்கிய கருணே, அன்பு, பக்தி, பாசம் ஆகிய உணர்வுகளே இந்த லட்டுவினுள் காண்பானே ஒழிய வெறும் கடலைமாவு, சீனிநெய் இவற்றின் கலவையாக அதைப் பார்க்க மாட்டான். கடைக்காரரின் கருணையை, சமையல்காரரின் திறமையை, லட்டுப் பிடித்துப்போடுபவரின் அன்பை, பரிமாறுபவரின் பாசத்தை உணர்ந்து கொள்ளத் தெரிந்தவர்க்கு லட்டு என்ற ஸ்தூலச் சின்னம் கிடைக்காமல் போய் விட்டாலும் அதன் ரசத்தை அனுபவித்தவரே ஆவார். லட்டை உருவாக்கிய

வர்களின் அன்பில் தோய்ந்து நெகிழ்ந்த அவரால், புறச்சின்னமாகிய வெறும் லட்டுவைத் துறந்து விட முடியாதா என்ன? ஆகவே நாம் ஒரு கர்மத்தைச் செய்கின்ற போது அப்பணி நமக்குத் தருகின்ற அமைதி, மனநிறைவு, அப்பணியைச் செய்கின்ற போது நம்விரல்கள் பயிற்சி பெறுதல், மனம் பண் படுதல், அறிவு கூர்மையாகுதல், இவைகளே நாம் செய்யும் நற்பணியினுல் நமக்குக் கிடைக்கிற மிகப்பெரிய லாபமாகும். இதனுடன் ஒப்பிடும் போது நம்பணியின் பின்விளேவாகியத் தூலமான பழம் வெறும் சக்கையே. ஆக பழத்தின் இனிமையைக் கர்மம் செய்யும் போதே நுகரத் தெரிந்தவனுக்குக் கர்மம் முடிந்த பின்பு விளேகின்ற பழம் மிகையான தன்றே. அதைத் துறந்து விட முடிகின்ற அளவுக்கு அவன் உள்நிறைவு உடையவன், செல்வந்தன் என்று கண்ணன் சொல்கின்ருன்.

இறைவனே நினேத்துக்கொண்டு செய்கின்ற கர்மம், வாசனேயை ஒழித்துக் கட்டுவதற்காகப் புரிகின்ற கர்மம், சமுதாயத்திடமிருந்தும், இயற்கை யிடமிருந்தும், உடலிலிருந்தும், பெற்ற கடன்களேத் திருப்பித் தருவதற்காகச் செய்கின்ற கர்மம் தானே ஒரு பழமாகும். அதிலிருந்து விளேயும் பிறிதொரு பழம் நமக்குத் தேவையில்லே.

ஞானதேவர் ''மரத்தினில் பழம் பழுக்கப் பழத்திலே பழம் வேறுண்டோ?'' என்று கேட்கின்ருர்.

நான்காவதாக இன்னெரு அழகிய காரணத் தையும் கண்ணன் கூறுகின்ருன். செய்யத் தகுந்த கர்மம், சுயதர்மமாகி நிற்கின்ற கர்மம் சாஸ்திரத்தின் வழிநின்று நல்லது செய்யும் சாத்வீகக் கர்மம் அழகானது. மனம் கவர்வது, சிந்தையைக்கிறங் கச் செய்வது, கர்மம் புரிபவனேத்தன் வயப்படுத்து வது, அதிலே மனம் லயித்துப்போய் அதற்குப் புறம் பான எல்லாவற்றையும் மறந்து விடும்படி கர்மம் புரிபவன் உள்ளத்தைக் கொள்ளே கொள்வது. அப்

படிப்பட்டக் கர்மத்தைப் புரிவதே ஒரு ஆனந்தந் தான். அச்செயலிலிருந்து மனத்தைக் கழட்டி அக் கர்மத்தைப் புரிந்து முடித்தபின் கிடைக்கக் கூடிய பழத்திலோ, கூலியிலோ, புகழிலோ என்ன ஆனந் தம் இருக்க முடியும்? தன்னை மறந்து பாடுகின்ற ஒருவன் பாடுவதாகிய கர்மத்தில் மனம் லயித்துப் போகிறான். அவனுக்கு அவனுடைய இசை கர்மம் மட்டுமல்ல, கர்மத்தின் பயனும் அதுவேயாம். அப் படிப்பாடலிலே தன்னை மறக்க முடியாத ஒருவன் பாடி முடித்தபின் தனக்கு கிடைக்கப் போகும் கூலி யையோ, கரஒலியையோ, நினைத்துக் கொண்டி ருந்து விட்டால் அவன் பாடலில் அவன் மனமும் லயிக்காது கேட்பவர் மனமும் மயங்காது. ஆகவே நாம் புரிகின்ற கர்மத்தில்மனம் ஒன்றிப் போகுமாறு செல்வதற்கு ஒரே வழி பலனைத் துறப்பதே, மறப்பதே.

ஐந்தாவதாக, கண்ணன் பலனைத் துறப்பதற்கு இன்னொரு விதமாகவும் நம்மைத் தூண்டுகிறான். கத்திரிக்காய் விற்கிற ஒருத்தியைப் பார்த்து, ''கத் தரிக்காய் என்னவிலை'' என்று கேட்கிறோம்? ''கிலோ ஒரு ரூபாய்'' என்று அவன் சொல்லு கிறான். வாங்குபவர்கள் எப்படியாவது பேரம் பேசி ஒரு ரூபாயைக் காட்டிலும் குறைந்த விலையில் கத்தரிக்காயை வாங்கி விடவேண்டுமென்று விரும்பு வார்கள். அப்படிப் பேரம் பேசாவிட்டாலும், அந்தக் கத்திரிக்காய்க்கு அவர்கள் கொடுக்கக் கூடிய அதிக பட்சவிலை கத்திரிக்காய்க்காரி சொன்ன ஒரு ரூபா யாக இருக்குமேயொழிய அதைவிட அதிகமாயிருக் காது. அதனால் நாம் விற்கப் புகுந்த ஒரு பொரு ளின் அதிகப்பட்சவிலை அதனால் கிடைக்கக் கூடிய மிகப்பெரிய லாபம் அதற்கு நாம் சொல்லும் விலையே. நாம் சொல்லும் விலையைக் காட்டிலும் அதிக விலை யைக் கொடுத்து நம்மிடமிருந்து யாரும் பொருளை வாங்கமாட்டார்கள். அதனால் கண்ணன் சொல்லு கின்றான். நாம் வியர்வைக்குக் கூலியாக இவ்வுல

கில் பெறுகின்ற மிகப்பெரிய லாபமாகிய கண்ண னின் திருவடிகளே கிடைக்கும் என்றபோது அவற் றைவிட 'மிக மிகத்தாழ்ந்த புலனின்பங்கள், பணம், புகழ்,' இவற்றை' நம் கர்மத்திற்குக் கூலியாக ஏற் றுக் கொள்வது மடமையல்லவா!

எதனையெய்தி அதனில் மேலாம்
லாபம் உளதாய் மதியானோ
எதிலே நிலைத்துத் துயரே வரினும்
சிறிதும் கலக்கம் எய்தாரே! (6-22)

என்று கண்ணன் நம் கர்மங்கள் அனைத்திற் கும் பலனுக ஒப்புயர்வற்ற ஆன்ம லாபத்தையே பெற முடியுமென்று ஆசை காட்டுகின்றுன்.

டப்பாவை திறந்து மிட்டாய் எடுத்துக் கொள் என்று கடைக்கு வந்த குழந்தையிடம் கடைக்காரர் சொன்னாராம். உங்கள் கையினுலேயே கொடுங்கள் என்றானாம் குழந்தை. குழந்தையின் கையை விட கடைக்காரர் கையிலே மிட்டாய் அதிகம் வரும் அல்லவா. நம் கர்மத்திற்குக் கூலியாய் எது வேண்டுமென்று நாமே வேண்டுவதைக் காட்டிலும் நம்மீது அன்பும் விசாலபுத்தியும் கொண்ட கண்ணனே அதைத் தேர்ந்து எடுக்கும்படி விட்டு விடுதல் அறிவுடைமை அன்ரு!

இப்படிச் செய்கின்ற கர்மத்தின் பலனை நாம் ஏன் துறந்து விடவேண்டும் என்பதற்கான கார ணங்களை அடுக்கிக்கொண்டே போகிருன் கண்ணன். தொழிலைச் செய்கின்றவன் கர்மத்தைப் புரிகின்ற வன் அதன் பயனைப் பற்றியே நினைத்துக் கொண் டிருக்கிருன் என்று வைத்துக் கொள்ளுங்கள். கர் மத்தைப் புரிகிற போதே அதனுல் விளையும் பயனை இவன் தான் மனதினுலே அனுபவித்துக் கொண்டிருக்கிருனே? அதனுல் கர்மம் செய்து முடித்த பிறகு ஸ்தூலமான பழம் இவனுக்குக் கிடைத்த போதிலும் கூட அதன் சாற்றை மனத்திலே ஏற்கெ னவே உண்டு விட்டபடியால் அப்பழத்தில் புதுமை

யின் கவர்ச்சி இல்லை. மனதை மகிழ்வித்தல் என்ற பரிமாணம் இல்லை. எதிர்பாராமல் கிடைத்த வொன்றில் இருப்பதைப் போன்ற மனதை திடுக் கிடச் செய்யும் இன்ப அதிர்ச்சி இல்லை. கர்மத்தைப் புரிந்து கொண்டிருக்கும் போது பழத்தைப் பற்றி நினைக்காமலிருந்தால் வினையால் விளையும் பழத்தில் இத்தனை இன்பங்களும் இணைந்திருக்குமே. செய லைச் செய்கின்ற போது பழத்தை மறந்து விடு என்று கண்ணன் சொல்வது இதனுல்தான்,

தருக்கத்தைச் சொல்லி பலனைத் துறக்க தூண் டும் கண்ணனே இப்பொழுது அன்பைக் காட்டி பலனைத் துறக்கத் தூண்டுகிருன். இறைவன் அன்புக் குரியவன் நம்மையே நமக்கு அளிப்பான் மனதைக் கவர்பவன். ஆராவமுதன், எவ்வளவு அனுபவித்தா லும் குறையாதவன், தெவிட்டாதவன், நமக்குப் பிரியமான பொருள்களையெல்லாம் அவனுக்கு நாம் அர்ப்பணித்து விடலாமென்னும்படி நமக்கு இனிய வன். அவனிடத்தில் அன்பு நாம் வைக்கவேண்டு மானுல் அவன் கட்டளையாகிய சாஸ்திரத்தில் கூறிய படி பழத்தையெல்லாம் அவனுடைய திருவடியில் போட்டுவிட வேண்டும்.

''ப்ரியார் ஹாய நமஹ'' என்ற சகஸ்ரநாம பதத்திற்கு பக்தனுக்குப்பிரியமான வஸ்துக்களையும் இறைவனுக்காக விட்டுக்கொடுத்து விடலாமென்று சொல்லும்படி பக்தனுக்கு இனிமையானவன் என்று பொருள்.

கர்மத்தைப் புரிவதற்கும் பலனைத் துறப்பதற்கும் கண்ணன் கூறும் அடுத்தகாரணம்: ஒரு கர்மத்தைப் புரிந்து பலனை விளைவிப்பதற்குப் பல நிபந்தனைகள் உண்டு. பல வசதிகள் வேண்டும். அவை எல்லா வற்றையும் ஒன்று சேர்த்தால் தான் பழம் விளையும். விவசாயம் செய்து தானியத்தை விளைவிப்பதற்கு வேண்டிய எல்லா நிபந்தனைகளையும் விவசாயியால் பூர்த்தி செய்ய முடியாது. அவன் வயலை உழலாம்

எரு போடலாம் விதையை விதைக்கலாம். ஆனால் மழையைப் பெய்விக்க அவனால் முடியாது. பழத்தை விளைவிக்கும் நிபந்தனைகள் அனைத்தையும் பூர்த்தி செய்ய முடியாத விவசாயி வினைப்பயனில் உரிமை கொண்டாடவும் முடியாது என்கிறான் கண்ணன்.

கடைசியாகக் கண்ணன் கூறுவது இதுதான். ஆனந்தம் என்பது உனக்குள்ளே உள்ளது. வெளியே ஆனந்தம் எதுவும் இல்லை. புறப்பலன்களைத் துறந்தால் அன்றி உனக்குள்ளே இருக்கிற மகிழ்ச்சி ஆனந்தம், நல்லறிவு கிட்டாது. ஆகவே மனதை வெளி நோக்கிச் செலுத்துகின்ற மனதை அலைக்கழிக்கின்ற உண்மையான ஆனந்தத்திலிருந்து மனதை திசை திருப்புகின்ற பழங்களை விட்டுத் தொலை என்கிறான் கண்ணன்.

நாமும் நம்முடைய உழைப்பாகிய பாலில் படுகின்ற நெய்யாகிய வெண்ணெயாகிய கர்மப்பயனை, வெண்ணையுண்ட கண்ணனுக்கு அர்ப்பணித்து உயர்வடைவோமாக.

## அத்தியாயம்: 8 கருவறை

இப்படிச் சிறப்பான முறையில் கருமத்தைப் புரிந்து விட்டு அதன் பலன் அனைத்தையும் துறக்கக் கற்பிக்கும் கண்ணன் பற்றின்மை எனும் பெரிய உபதேசத்தை அடுத்துப் புரிகின்றான். பற்றின்மை என்பது இறைத்தன்மையின் மாபெரும் விளக்கமாகும். ''பற்றற்றான்'' என்று தானே இறைவனைத் திருவள்ளுவர் புகழ்கின்றார். ''ஆசையறுமின்கள். ஆசையறுமின்கள் ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்'' என்பது திருமூலர் வாக்கு.

சுயதருமத்தை நன்கு புரிகின்ற கருமயோகி, சாஸ்திரவழி நிற்கலாம். நன்கு வினையாற்றலாம், பலனைத் துறக்கலாம். இவ்வளவும் இருந்தும், அவனுக்கு அவ்வினையில் பற்று இருக்குமானால். வினை

யில், பயன்படும், பொருள்களில், மனிதர்களிடத்து, தொண்டுபுரியும் இடத்தில் அவன் பற்று வைத்திருப் பானாகில் அந்தப்பற்று அவன் துன்பத்திற்குக் காரணமாகிவிடும்.

ஒரு நல்லபணியைச் செய்துவிட்டு வா என்று ஒரு தொண்டனை ஒரு இடத்துக்கு அனுப்புகிறோம். அவன் நன்றாகவே பணி புரிகிறான். சுய நலமின்றிக் கருத்துப் பிரசாரப் பணியைச் செய்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் அந்தப் பணியில், அந்த ஊர் மனிதர்களிடத்தில், அந்த ஊரில் பற்றை வளர்த்துக் கொண்டு, வேற்றூருக்குப் போகமாட் டேன், வேற்று மனிதர்களிடையே பணிபுரிய மாட் டேன் என்று கூறுவானானால், அவனுடைய பற்று, அவன் கருமத்தைக் கருமயோகமாக மாறுமல் தடுக் கிறது என்று பொருள்.

அதேமாதிரி கருமத்தை விட்டுவிடுவதிலும், அகர்ம நிலையிலும் ஒருவன் பற்று வைக்கக்கூடாது என்று கண்ணன் பகர்கின்றான். எனக்குக்கர்மவினை எப்போது நீங்கும்? அகர்மநிலை எப்போது உண்டா கும் என்று தவிப்பவன் அகர்மநிலையை எய்துவது கடினம். வினையை முடித்தவனுக்கே அகர்ம நிலை கிட்டும். வினையை, கருமத்தை, தொண்டை, அரை குறையாக விட்டு விட்டு ஓடுபவனுக்கல்ல.

''வினையற்றிருக்கவும் விரும்பாதே''
என்றும் (2-47)

''செயலே தொடங்காதிருப்பதனாலே
யாரும் செயலறு நிலை எய்தார்
துறவறம் பூண்ட காரணம் ஒன்றால்
உய்யும் நற்கதி தனை ஆளார்'' (3-4)

என்றும் கண்ணன் கூறுகின்றான்.

தொண்டு புரிவது, கண்ணனுக்கு உற்றோமே ஆகி ஆட்செய்வது லேசான காரியமா என்ன? அதற்

கென்று ஒரு பெரிய நற்குணங்களின் சைனியமே வேண்டும். தன் மனத்துக்குள்ளே ஒளிந்து கிடக்கிற, காமக்குரோதம் ஆகிய அசுரர்களுடன் போரிடுவதற்கு நல்ல நல்ல குணங்களாகிய சத்விருத்திகளாகிய தேவர்களின் சேனை வேண்டும்.

இதை கண்ணன்,

அஞ்சா நிலைமை உள்ளத்தூய்மை
ஞானம் யோகம் தனில் உறுதி
ஐம்புலன் அடக்கம் ஈகை யாகம்
தவத்தொடு நேர்மை மறை ஓதல் (16-1)
அஹிம்சை சத்தியம் சினம் கொள்ளாமை
தியாகம் சாந்தி வசை இன்மை
இரக்கம் பிறர்பொருள் விழையாத்தன்மை
இனிமை நாணம். மனத்திண்மை (16-2)
வீரம் பொறுமை மனத்தில் உறுதி
தூய்மை படிறில்லா உள்ளம்
செருக்கில்லா நிலை இவையே அர்ஜுனா
தெய்விக இயல்பினர் சம்பத்தாம் (16-3)

இப்படி இந்த தேவ சேனைக்கு சேனாதிபதியாக முன்னின்று போரை நடத்திச் செல்வது அபயம், துணிவு, செயல் திறம் (initiative) ஆகியவையே. போரிடும் சேனையைப் பின்னின்று காப்பது (Rearguard action) செருக்கில்லா நிலை ஆகும். இப்படித் துவங்கிய சுயகருமம், முழுமையடைந்ததும், அக்கருமத்தினால்தான் பெறவேண்டிய ஆன்மீக உயர்வினைப் பெற்றுவிட்டவுடன் கருமத்தை நிறுத்தி விடுவதற்கு செருக்கற்ற நிலை, அகம் பாவமற்ற மனம், அனைத்தையும் இறைவனே செய்கிறான் என்ற உணர்வு வேண்டும். இவ்வுணர்வுதான் செருக்கற்ற நிலையும், பற்றின்மையும் ஆம். இப்பற்றின்மை இல்லையேல், தொண்டன், நிறுத்த வேண்டிய இடத்தில் தொண்டை நிறுத்தாது மிகை படச் செய்து, தொண்டை, ரசமிழக்கச் செய்து விடுவான். என்னிலையிலும் தன்வசமிழக்காமல்

ஸ்வவசனாய், தொடங்க வேண்டிய இடத்தில் தொண்டை அச்சமின்றித் தொடங்கி, நிறுத்த வேண்டிய இடத்தில் செருக்கும் பற்றும் இன்றி நிறுத்துதல் கருமயோகமாம்.

பற்றின்மை என்பது கருமயோகத்தைப் பொறுத் தவரை, கருமத்தைத் துவங்காமல் இருப்பதுமல்ல, துவங்கிய கருமத்தை விட்டுவிட்டு ஓடி விடுவதுமல்ல, செய்யும் கருமத்தில் தன்னைத்தானே மூழ்கடித்துக் கொண்டு கருமத்தை ஈஷிக்கொண்டு, கருமத்தின் அழகைக் காணத்தவறி விடுவதுமல்ல. பற்றின்மை என்பதன் உண்மையான அர்த்தம், ஒரு செயலின், பொருளின் உண்மையான அழகைக் காண்பதற்கு வசதியாக, எவ்வளவு தூரத்தில் நிற்க வேண்டுமோ அவ்வளவு தூரத்தில் நிற்பது என்பது ஆகும். ஒரு பூச்செடியின் முழு அழகும் தெரிய வேண்டுமென்றால் பூச்செடி கண்ணுக்கு மிக அருகில் இருக்கக்கூடாது மிகத் தொலைவிலும் இருக்கக்கூடாது. நெருப்பிலே குளிர் காய்கிறவன் நெருப்பை மிக அதிகமாக நெருங்கினாலும் சுட்டுவிடும், மிகத்தொலைவில் சென்றால் குளிர்விடாது. மன்னனின் தயவைப்பெற விரும்புபவன் மன்னனிடம் மிக நெருக்கமாகவோ வெகு தொலைவிலோ செல்லக்கூடாது என்கிறாரே வள்ளுவர்.

> ''அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
> இகல்வேந்தர் சேர்ந் தொழுகுவார்.''

ஆக பற்றின்மை என்பது ஒரு செயலின், ஒரு பொருளின் அழகு தெரியும்படியாக அதனின்று விலகி நிற்றல் என்பதாம்.

பற்றின்மை, அழகைக் கூட்டுகிறது. அன்பை அதிகரிக்கிறது. புனிதத்தன்மையை, புதுமையை, கவர்ச்சியைத் தக்க வைக்கிறது. ஆனந்தத்தை அதிகரிக்க வைக்கிறது. பற்றின்மையின் இன்னொரு பெயரான தியாகத்தைப் பற்றி வேதங்கள் கூறு கின்றன:-

(i) தியாகம் செய்து அதனால் வரும் இன்பத்தைத் துய்ப்பாயாக.

(ஈசாவாஸ்யம்-1)

(ii) தியாகத்திலிருந்தே பலர் அமுதத்தை அடைந்தனர். (கைவல்யோபநிஷத்-3)

அதனால் தான் கண்ணனும்

யோகம் தனிலே நிலை கொள்வாய் நீ
பற்றைத் துறந்தே வினையாற்று
வெற்றி தோல்வி சமமாய்க் கொள்வாய்
யோகம் ஆவது சமமதியே (2-48)

என்கிறான்.

ஒரு புதிய பேனா வாங்குகிறோம்: எழுதிப் பார்த்து வாங்குகிறோம். நன்றாக எழுதுகிறது. கொஞ்சநாள் கழித்துப் பார்த்தால், பேனா நன்கு எழுதவில்லை போல் தோன்றுகிறது. உண்மை இது தான். பேனா நன்றாகத்தான் எழுதுகிறது. நம்முடைய அலுப்பு, சலிப்பு அனைத்தையும் நாம் அந்தப் பேனாவின் மீது சுமத்தி, நம்குறையைப் பேனாவின் குறையாகக் காணுகின்றோம். ஒரு சில நிமிஷங்கள் பக்கத்தவர் பேனாவை வாங்கி எழுதினால் அது நன்றாக எழுதுவது போல் தோற்றமளிக்கிறது. பக்கத்தவர் பேனா உண்மையில் உன் பேனாவை விட நன்கு எழுதுவதில்லை. அது உன் பேனா இல்லை என்பதால் அது அலுப்புத்தட்டாதிருக்கின்றது. உன் பேனா அலுப்புத்தட்டுவதற்கே காரணம் நீ அல்லவா?

முதன் முதலில் கன்னியாகுமரியைப் பார்க்க நீ வருகின்றாய். அந்த ஊரின் கடலும் கோவிலும், விவேகானந்தர் நினைவாலயமும் அழகு கொப்பளிக்க விளங்குகின்றன. நீ கன்னியாகுமரியிலேயே தங்கிவிடுகின்றாய். கன்னியாகுமரி ஊரும், இடங்களும் மெல்ல மெல்லத் தன் அழகை, கவர்ச்சியை, பொலிவை இழந்து விடுகின்றன. புதிதாகக் கன்னி

யாகுமரி வருகின்ற ஒருவனுக்கோ, உனக்கு முதல் நாள் தோன்றிய அதே அழகுடன் தோன்றுகிறது. ஆக, கன்னியாகுமரி தன் அழகை இழந்து விடாம லிருக்க வேண்டுமானுல் நீ உன் அலுப்பை, மனக் கசப்பை, மனக்கழிவுகளை கன்னியாகுமரியின் மீது சுமத்தாமல் இருக்கவேண்டும். இப்படி காணுகின்ற பொருளிலிருந்து தன்னை விலக்கிக் கொள்ளுதல் மிக வும் முக்கியமானதாகும். காணும் பொருளின் உண்மைத் தன்மையைச் கலப்படமற்ற சௌந்தர் யத்தை, மாருத அழகை நீ காணவேண்டுமானால் நீ பார்க்கும் பொருளிலிருந்து உன்னை அப்புறப் படுத்திக் கொள்ளுதல் மிகமிக அவசியமானதாகும். இப்படியாகப் பற்றின்மை, அழகுணர்ச்சிக்கு வித்திடு கிறது. இதனுல்தான் புற உலகின் சௌந்தர்யத்தைப் பக்தன் தொடர்ந்து கண்டு கொண்டேயிருக்க வேண்டுமென்பதற்காக எந்த சன்னியாசியும் மூன்று தினங்களுக்கு மேல் ஓரிடத்தில் தங்கலாகாதென்று நமது முன்னோர்கள் விதி வகுத்திருக்கிருர்கள். ஒரு இடத்தின், செயலின், பொருளின் அழகு தெரியும் படித் தள்ளி நின்றும் அச்செயல், அப்பொருள், அவ் விடம் தன் பார்வையிலிருந்து விலகி விடாதபடி நெருங்கி நின்றும் இப்படி நெருங்கியும், விலகியும் தன் இடத்தைச் சரிசெய்து கொண்டு அழகை ரசிப் பது உயிருள்ள, ஜீவனுள்ள ஒருவனின் பாக்கிய மாகும்.

இக்காரணங்களினால் பற்றற்றுக் கர்மம் புரிவ தென்பது கடமைகளை மறந்தோடுவது ஆகாது,வினை களை விட்டொழிப்பதும் ஆகாது. பற்றின்மை என்பது சௌந்தர்ய சாஸ்திரத்தின் அடிப்படை விதியாகும். அதனால் கர்மயோகம் புரிபவன் பற்றினைத் துறந்து பணிபுரிய வேண்டுமென்று கண்ணன் விதிக்கிருன்.

## அத்தியாயம்; 9 கோபுரக் கலசம்

கண்ணனின் கருத்துப்படி செயலின்மையை காட்டிலும் செயல் சிறந்தது. பிறர் தர்மத்தைக்

காட்டிலும் சுயதர்மம் உயர்ந்தது. மனிதன் சாத்திரத்தைப் பின்பற்றி திறமையுடன் வேள்வியைப் போன்று பணிபுரிந்து விளையும் பலன்களைச் சமுதாயத்திற்கும், கடவுளுக்கும் அர்ப்பணித்துப் பற்றற்று வாழுகின்ற போது கர்மம் கர்மயோகமாகிறது. இப்படிப்பட்ட தொண்டன், பக்தன், யோகி, ஞானி சரியான மனப்பாங்குடன் பாவத்துடன், மன நிலையுடன் பணிபுரிய வேண்டுமென்பது கண்ணனின் அடுத்த கட்டளையாகும்.

இதுவரை சொன்ன எல்லா விதிகளையும் தொண்டன் பின்பற்றியிருந்தாலும் அவனுடைய நோக்கமும், மனநிலையும், ஆக்க பூர்வமானதாக, பக்திமயமானதாக இல்லையென்றால் அத்துணையும் பாழாகி விடும். இப்படிப்பட்ட சரியான மனநிலையைக் கண்ணன்

''பாண்டவா! எனக்காய்ச் செயல் புரிவோனும்
பக்தியோடு என்னைப் பணிவோனும்
உலகில் பற்றோ வெறுப்போ இன்றி
வாழும் அன்பன் எனை அடைவான் (11-55)

என்ற சுலோகத்தின் மூலம் விளக்குகிறான். பக்தன் இறைவனுக்காகக் கர்மம் புரிகின்றான். இறைவனைப் பூஜிக்கின்றான், பற்றற்று இருக்கின்றான். எவ்வுயிரிடத்தும் அவன் வெறுப்புக் கொள்வதில்லை, இந்த மனநிலை அலுப்பை விலக்கி புற இலாபங்களைக் கருதாமல் ஆன்ம இலாபமே, தெய்வ தரிசனமே தொண்டின் பயன் என்று தொண்டனுக்குக் கற்றுக் கொடுக்கும்.

புறக்கர்மங்கள் எவ்வளவு கடுமையாக இருந்தாலும், துன்பம் தருபவையாக இருந்தாலும் அவை நம் மனத்திற்குப் பிடித்தவையாக இருந்தால் போதும் அத்தனை கஷ்டங்களையும் தாங்கிக் கொள்கின்ற சக்தி, மனநிலை வந்துவிடும். இந்த ஆக்க பூர்வமான, தொண்டுக்கு அநுகூலமான மன நிலையை மனஅழகை உற்சாகமென்று அழைப்பர்.

பக்தி என்று அழைப்பர், அன்பு என்றும் அழைப்பர். இக்குணங்கள் உழைப்பை லேசாக்கும், பலனைத் துறக்கும் போது ஏற்படும் வலியைக் குறைக்கும், தியாகத்தை சுவையுள்ளதாக்கும், பற்றின்மையில் இரசத்தைச் சேர்க்கும்.

ஒரு கதை சொல்வதுண்டு. சாலை ஓரத்தில் மூன்றுபேர்கள் கல் உடைத்துக் கொண்டிருந்தார்கள். முதல் தொழிலாளியை அணுகி ஒருவன் ''அப்பா'' என்ன செய்து கொண்டிருக்கிறாய்'' என்று கேட்டான். தொழிலாளி சொன்னான் ''அய்யா! என் கஷ்டத்தை ஏன் கேட்கிறீர்கள்? நிழல் கூட இல்லாமல் குடிக்க நீரில்லாமல் இந்த வெயிலில் கல் உடைத்துக் கொண்டிருக்கிறேன். நாள் முழுவதும் உடைத்தால் இரண்டு ரூபாய் கூலி'' என்றான்.

வழிப்போக்கன் இரண்டாவது தொழிலாளியை அணுகி ''அப்பா: உன் செயல் யாது?'' என்று கேட்டான். இரண்டாவது தொழிலாளி சொன்னான். ''அய்யா, இந்த ஊர் பக்தர் ஒருவர் கண்ணனுக்குக் கோயில்கட்டுகிறார். அந்தத் திருப்பணியில் கொஞ்சம் கூலியைப் பெற்றுக்கொண்டு நானும் உதவுகிறேன்'' என்று சொன்னான். வழிப்போக்கன் மூன்றாவது தொழிலாளி அருகே சென்று ''நண்பனே! உன் தொண்டு என்ன?'' என வினவினான். அதற்கு அவன் கண்ணீர் மல்கிச் சொன்னான் ''என் அன்பினுக்குரிய கண்ணனுக்கு மனத்திலே கோயில் ஏற்கனவே எழுப்பியிருக்கிறேன். இப்போது புறத்தே கற்கோயில் ஒன்றும் அமைத்துக் கொண்டிருக்கிறேன்.'' என்று அழகாய்ப் பதில் அளித்தான். மூன்று தொழிலாளிகளுடைய வேலையும் ஒன்று தான். நீர் இல்லாத கற்காட்டில் அதே உழைப்புத் தான். ஒருவனுக்கு அது அற்பக்கூலியைப் பெற்றுத்தரும் உழைப்பு, அது அலுப்பைத் தரும், களைப்பூட்டும், வாசனையை உண்டாக்கும்,

பந்தப்படுத்தும் கட்டிப்போடும் கர்மமாகும். இரண்டாமவனுக்கோ உள்ளூர் பக்தன் கோயில் கட்டும் திருப்பணியில் தன்னாலான தொண்டைத் தானும் செய்த மனநிறைவு, மூன்றாமவனுக்கோ இன்னொருவன் உத்தரவில், பெயரில்தான் கோயிலைக் கட்டுகிறோம் என்பதும் உழைப்பும் வெயிலும் தண்ணீர் தாகமும் மறந்தே போயின. தானும் கண்ணனுமே அவனுக்கு அங்கே மிச்சம். அவனுடைய மனப்பாங்கு, உற்சாகம் வேலையின் பளுவைக் குறைத்து பக்தியெனும் அழகை ஊட்டிக் கர்மத்தை கர்மயோகமாக்குகிறது, சிறுசெயலைப் பெருவேள்வியாக்குகிறது. வெறும் சோற்றை பிரசாதமாக்குகிறது. வாடிவிடக்கூடிய பூவை இறைவன் திருவடியில் சேரும் பூஜைப் பொருளாக்குகிறது. கடினமான கல்லை மோட்ச சாதனமாகிய தெய்வத்திரு உருவமாக மாற்றுகிறது. வெறும் நடையை கோயிலை வலம் வருவதாகிய பிரதட்சிணையாக்குகிறது. வயிற்றுத் தலையணையில் சோற்றுப் பஞ்சையடைக்கும், இழிசெயலை நிவேதனமாக்கி விடுகிறது. வகையன்றி மனதில் தோன்றும் எண்ணங்கள் அனைத்தையும் தியானமாக்கி விடுகிறது. பைத்தியக்காரத்தனமான உளறல்களை ஜபமாக்கி விடுகிறது. மண்ணாங்கட்டியைச் சந்தனமாக்கி விடுகிறது. கண்ணால் காண்பவை யாவையும் தெய்வ தரிசனமாக்கி விடுகின்றன. கேட்கும் வெறும் ஒலிகளெல்லாம் கண்ணனின் திருப்புகழ் கீதமாக ஒலிக்கின்றன. யார் யாரையோ, எப்படி எப்படியெல்லாமோ நேசிக்கும் செயல்கள் தெய்வத்தின் மீது வைத்த அன்பாகி விடுகின்றன. இந்த மாயவித்தையைச் செய்வது தொண்டனின், பக்தனின், யோகியின், ஞானியின் மன அழகுதான், மன அழகேதான், மன அழகு மட்டும்தான்.

இப்படி எளிமையானப் புறச்செயல்களை மோட்ச சாதனமாக்கி விடுவது சரியான மனநிலை என்று கண்ணன் உபதேசிக்கிறான்.

## அத்தியாயம்: 10 மூலவர் சன்னிதி

இப்படிக் கருமயோகத்தின் பல்வேறு நிலைகளைக் கூறிவந்த கண்ணன் இறுதிப்படியையும் கூறுகின்றான். இறுதி நிலையில் கருமயோகி செயல்கள் அனைத்தையும் கண்ணன் திருவடியிலே அர்ப்பணிக்கும் சன்னியாசியாக ஆகிவிடுகின்ருன். தொண்டன் எந்த அளவுக்குப் பரம்பொருள் வயமாகி விடுகின்ருன் எனில் அவனுக்கு தருமம் அதருமம் பற்றிய சிந்தனைகள் அனைத்தும் அற்று விடுகின்றன. அதாவது அவன் தன் வயமின்றி இறைவன் மீது கொண்ட பக்தியால், இறைவன் மீது கொண்ட நம்பிக்கையால், இறைவன் மீது கொண்ட சமர்ப்பண பாவனையால், தன் அறிவைத் தியாகம் செய்துவிட்டு இறைவன் செயலாகவே அனைத்தையும் செய்கின்றான்.

இவ்வாறு செய்வதனால் அவன் அதருமத்தைச் செய்து விடுவான் என்று பொருள் இல்லை. அவன் தன் வயமின்றிச் செய்யும் அனைத்துச் செயல்களும் தரும மயமாகி விடுகின்றன என்று பொருள். காலியான புல்லாங்குழல் கண்ணனின் இசையையே பொழிவதுபோல இந்த முதிர்ந்து கனிந்த தொண்டன், தன் செயலாக எதுவுமின்றி அனைத்தையும் இறைவன் செயல்களாக்கி விடுகிற பணியில் வெற்றி கண்டு விடுகின்றான். இந்நிலையைக் கண்ணன் கீதை 18—16 ல்

அறவினை யாவும் துறந்தோனாக
எனையே சரணம் புகுவாய் நீ,
யானுன் பாவம் நீக்கி,
மோக்ஷம் அருள்வேன் கலங்காதே

(18—66)

அந்தத் தொண்டன் இறைவன் கைக்கருவியாக ஆகிவிட்டான்.

நீயோர்க்கருவி என்றே போரில்
இவர்களை வென்றுன் பணியாற்று

(11—33)

என்ற கீதா வாக்கியம் அவன் வாழ்வில் உண்மை யாகி விட்டது.

இந்தத் தொண்டன்
மனத்தை என்னில் நிறுத்திடுவாய் நீ
அறிவையும் என்னில் ஆக்கிடுவாய்.

(12—8)

என்ற வாக்குக்கு வாழும் உதாரணமாக ஆகி விட்டான்.

கௌந்தேயா நீ எதைச் செய்தாலும்
எதை உண்டாலும் வேட்டாலும்
எதை ஈந்தாலும் எத்தவம் செய்யினும்
எனக்கே அர்ப்பணம் எனச் செய்வாய்

(9—27)

என்ற உபதேசம் அவனிடம் நிறைவைக் கண்டு விட்டது. தன்வயமின்றிப் பிரகிருதியின் வசப்பட்டு இயங்கி வந்த சாதாரண மனிதன், இறைவனின் கைக்கருவியாகிற அளவுக்கு உயர்ந்து விட்டான்.

இத்தகைய பக்தன், தொண்டன், யோகி, ஞானி இறைவனின் உருவே என்பது கண்ணன் ஏற்றுக் கொண்ட கருத்து : ஞானி

என் உருவே இது என் கொள்கை
யோகம் தனிலே நிலையுறும் அவனே
மேல் கதியாம் எனைச்சரணுற்றான்.

(7—18)

இந்த நிறைவுடைய சாதகன் சாந்தி அடைகிறான். நிறைவைப் பெறுகிறான். லாபம் பெறுகிறான்.

தவத்தொடு யாகம் துய்ப்போன் யானே
உலகுக்கெல்லாம் ஈசுவரனே,
எல்லா உயிர்க்கும் தோழன் நானே,
என அறிவோனே சாந்தியுளான்.

(5—29)

கண்ணபிரானின் கருமயோகம் கூறும் வளர்ச்சி நிலைகள் இவையே

(1) முயற்சி செய்யாதிருப்பதை விட, முயற்சி செய்வது உயர்ந்தது.
(2) உன் சுயதருமத்தைக் கடைப்பிடி. சுய கருமத்தைப் புரிக.
(3) சாஸ்திரங்களை, குருவை, மனச்சாட்சியை பின்பற்றுக.
(4) திறமையுடன் பணி ஆற்றுக. தொண்டு புரிக.
(5) பலனைத் துறந்துவிடு. அதனை இறைவனுக்கும் சமூகத்திற்கும் அர்ப்பணம் செய்து விடுக.
(6) பற்றற்றுப் பணிபுரிக.
(7) சரியான மனநிலையுடன், மன அழகுடன் தொண்டு புரிக.
(8) அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணித்து அவனைச் சரணடைக.

இவ்வாறு தர்க்கத்தின் திறமையும், மொழி அழகும், கருணையும், அன்பும், விரவிய சொற்களால் கண்ணன், உடலில், பிராணனில், மனத்தில் அறிவில் உணர்வுகளை, மையம் கொள்ள விட்டிருக்கிற மனிதனை தொண்டின் மூலம், ஒப்புயர்வற்ற ஆன்ம லாபம் அமைகின்ற நிறைஞானியாக ஆக்கி விடுகின்றான்.

உதாரணத்தின் மூலம் உபதேசத்தின் மூலம், மனிதனை உயர்த்துகிற கண்ணன் பகவத்கீதை தரும் உபதேசங்கட்கு தானே வாழும் இலக்கணம் ஆகி விட்டான். அவன் வாழ்க்கையே அவன் உபதேச மாக, அவன் சொல்லும் செயலும் ஒன்றாகி நிற்கிறான்.

பாபங்களிலிருந்து நம்மை விடுவிப்பதாக உறுதி கூறுகின்றான். அவனே நம் வாழ்வும், துணையும், குருவும் லக்ஷியமும் ஆகி நிற்பான்.

ஓம் தத் ஸத்

### அனுபந்தம்

# கீதையின் அத்யாய வரிசை

### 'வினோபாஜி'

### மகாத்மா காந்திஜியின் கடிதம்

கோசரப்பில் நான் ஆசிரமம் திறந்த போதிலிருந்தே வினோபா என்னுடைய தோழராக இருக்கிறார். நான் விரும்பிய, எனக்குப் பிரியமான பல பணிகளை அவர் நிறைவேற்றியிருக்கிறார். கீதையின் அத்தியாயங்களின் வரிசையையே எடுத்துக் கொள்வோமே. நான் கேட்டது கொஞ்சம். வினோபா கொடுத்ததோ மிக அதிகம்.

வாசகர்கள் இதையும் நினைவில் கொள்ளட்டும். முதல் 14 நாட்களுக்குள் ஒரு தடவையும் பிறகு 7 நாட்களுமாக கீதை முழுவதையும் பாராயணம் செய்யும் எண்ணம் முதலில் எனக்கு எரவதா மந்திரில் உதித்தது. நான் என் திட்டத்தை வினோபாவிடம் கூறி அவருடைய ஒப்புதலைக் கோரினேன். நான் செய்வது சரியில்லை என்றார்.

இந்த பாராயண திட்டத்தைத் திருத்தியாவது கொடுங்கள் என்று கேட்டேன். விடையாக அவர் "**கீதை அத்யாய வரிசை**" என்ற இந்தக் கட்டுரையை அனுப்பியிருக்கிறார். கீதையை கவனத்துடன் கற்று, அது தரும் பாடத்தை வாழ்க்கையில் பயன் படுத்த விரும்புவோருக்கு இக்கட்டுரையால் மிக்க லாபம் உண்டாகும் என்று நம்பி இந்தக்கட்டுரையை உங்கள் முன் வைக்கிறேன்.

மஹாபலேசுபரம் **மோ. க. காந்தி**— 30-5-45.

**வணக்கத்துக்குரிய பாபூ.**

கீதையை ஒரே வாரத்தில் எப்படிப்படித்து முடிப்பது என்பது பற்றி நீங்கள் என்னைக் கேட்டிருந்தீர்கள். நான் அதற்கு விடையிறுக்க வேண்டும். நான் அதை

மறந்து விடவில்லை. ஆனால், அதற்குச் சுருக்க மாகப் பதிலளிக்காமல், இந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு, கீதையின் அத்தியாய வரிசை பற்றிய என் கருத்துக்களை ஒரு தடவை விபரமாகத் தருவோம் என்று நினைத்தேன். இதுவரை அந்தப் பணியைச் செய்ய முடியவில்லை. இப்போது, உங் கள் கேள்விக்கு போதுமான பதில் தரவேண்டுமே என்பதற்காகச் சுருக்கமாக விடை தர முயலுகிறேன்.

கீதையின் முதல் அத்யாயம், அதன் விதையைப் போன்றது. அதன் ஒரு சிறு கிளை இரண்டாவது அத்யாயத்திலும் நுழைந்து விட்டது. ஏனெனில் பகவானின் முதல் அறிவுரை, (2/2,3) மற்றும் அர் ஜுனனின் ஹரி சரணம் (2/7) இவற்றுக்குச் சிறப் பிடம் தரவேண்டிய தேவை தென்பட்டது. கீதை என்பதன் ஆரம்பம் 2/11 இலிருந்து தான். அங்கி ருந்து துவங்கி கீதையின் இரண்டாவது அத்யாயம் முழுவதிலுமாக கீதையின் முக்கிய விஷயம் முழுவ தும் சுருக்கமாகக் கூறப்பட்டு விட்டது.

(1) வாழ்க்கை சாஸ்த்திரம்.— ஆன்மா அழி வற்றது என்பது.—இதை கீதை ''சாங்கிய புத்தி'' என்றழைக்கும்.

(2) வாழ்க்கைக் கலை சமத்துவ பாவனையு டன் செயல் புரிவது எப்படி? இதை கீதை ''யோக புத்தி'' என்றழைக்கும்.

(3) வாழ்க்கையின் சாஸ்திரமும், கலையும்-சாங்கிய புத்தி, மற்றும் யோக புத்தி - இரண்டும் யாரிடம் நிலை பெறுகின்றனவோ, அந்த உயர்ந்த உதாரணத்தின் - குருமூர்த்தியின் வர்ணனை-இதை கீதை 'ஸ்திதப்பிரக்ஞன்' ''நிலைத்த உணர்வுடைய வன்'' என்று கூறும்.

(4) ''நிலைத்த உணர்வுடையவனின்'' இறுதி நிலை ''பிரம்மநிர்வாணம்.'' பிரம்ம நிர்வாணம் என்ற நிலைக்கு வந்தபின் உண்மையில் ''செய்வ தற்கு'' ஒன்றும் எஞ்சி இருப்பதில்லை.

இங்கே ஒன்று கூறவேண்டும். 'ஸ்திதப் பிரக்ஞ' (உணர்வு நிலை பெற்றவன்), பிரம்ம நிர்வாணம் என்ற இரு சொற்கள், கீதையைத் தவிர, சமஸ்கிருத நூல்கள் எதிலும், அதாவது கீதைக்கு முந்திய நூல்களில் காணக்கிடைப்பதில்லை. இதன் பொருள் என்னவென்றால், இவை, கீதை புகுத்தும், புதுச் சொற்கள், சிறப்புச் சொற்கள் - பக்தன், ஞானி, யோகி, அல்லது முக்தி, பரமபதம் அடைதல், திரும்பவராமை ஆகிய சொற்கள் கீதையில் உண்டு. ஆனால் அவை கீதை புகுத்திய புதுச் சொற்கள் அல்ல.

யாத்திரை முழுவதும் சடுதியில் முடிந்தது. அர்ஜுனனின் பிரச்சினையை முன் வைத்து, கீதையின் உபதேசம் முழுவதையும் மூன்று, நான்கு ஐந்தாம் அத்தியாயங்களில், திரும்பவும் விளக்கமாக கூறப்பட்டிருக்கிறது. அர்ஜுனன் மூன்றும் அத்தியாயத்தில் ஒரு கேள்வி கேட்கிருனே, அந்தக் கேள்வியை அவன் கேட்காவிட்டால், கீதை இரண்டாம் அத்தியாயத்திலேயே முடிவு பெற்று விடும். வாழ்க்கையின் தத்துவ அறிவு, வாழ்க்கையின் செயல்முறை அறிவு (கலை), முன்னுதாரணமான குரு, இறுதிப்பலன் இத்தனையும் கூறி விட்டபின் மிச்சம் என்ன இருக்கிறது?

மூன்றாவது அத்தியாயத்தில் பகவான் கருமம் புரிவதன் காரணத்தைக் கூறுகிறார். அறிவே உயர்ந்தது என்பது உண்மைதான். ஆனல் கருமம் இன்றி அது (அந்த அறிவு) கிடைப்பதே இல்லையே இதற்கு என்னசெய்வது? தனி மனிதனின் சம்பாத்தியம் (சரீரயாத்ரா) சமூகசேவை (யக்ஞம்) உணர்வின் தூய்மை (ஸம்ஸித்தி) மற்றும் சமூக ஒற்றுமை (லோக சங்கிரகம்) இவையே, ஒருவன் ஏன் கருமம் புரிய வேண்டும் என்பதற்கு ஒன்றைவிட ஒன்று உயர்ந்ததான காரணங்கள். நீங்கள் (மகாத்மா காந்திஜி) மூன்றாவது அத்தியாயத்தை, கீதையின்

திறவுகோல் என்கிறீர்கள். அது சரிதான். அர்ஜுனன் கேள்வி கேட்டிராவிடில், இந்தத் திறவுகோல் நமக்குக் கிடைத்திராது. பகவான்தான் பிரம்ம நிர்வாணம் வரையிலான நிலைகளை எப்போதோ கடந்து விட்டாரே!

இதற்குப் பிறகு நான்காவது அத்தியாயத்தில் 'கருமத்தின்' முழுமையான விளக்கம் தரப்பட்டிருக்கிறது. கர்மத்தின் பொருள், வாழ்க்கை ஓட்டத்தில் கிடைக்கிற புறச்செயல்கள். 'கர்மம்' என்பதன் இந்த விளக்கம் சரியானதுதான்-ஆனால் இதற்கு மேலும், அந்த கர்மம் சமத்துவம் உடையதாக ஆவதற்குத் தேவையான புலனடக்கம், தவம், நூல்பயிற்சி, அடக்கம் ஆகியவை அனைத்தும் விரிந்த பொருளில் நோக்கினால் கருமமேயாம். சுயதரும உருவான நேரிடையான கருமம், அதற்குத் துணையாக, உள் சுத்திக்கான பரந்த அல்லது விசேஷ கருமம், இப்படி இரட்டையோகம் பொருந்தி வருமானால், இறுதியில் 'அகர்மநிலை' கிட்டுகிறது- இவ்வளவும் நாலாவது அத்யாயத்தில் கூறப்பட்டிருப்பது.

ஆனால் இந்த கரும-அகரும நிலை பார்ப்பதற்கு இரண்டாகக் காணப்படுகிறது.
(1) எல்லாச்செயல்களையும் செய்தும் ஒன்றும் செய்யாதிருப்பது (யோகம்) (2) கருமம் ஒன்றும் செய்யாதிருந்தும் அனைத்துக் கருமங்களையும் சாதித்திருப்பது (சன்னியாசம்) இத்தகைய இருவித அகர்ம நிலைகளைச் சீர்தூக்கி ஒப்பிடுதல் ஐந்தாம் அத்தியாயத்தில் நிகழ்வது.

யோகமும் சன்யாசமும், உட்பொருள் அளவில் ஒன்றேயாம் (5/3-4). ஆனால் சாதகனின் பார்வையில், சன்யாசத்தை விட யோகம் சுலபமானது (5 6-12) அதாவது சன்யாசம், இறுதி நிலை மட்டுமே முடியும். ஆனால் யோகமோ சாதகனின்

நிலை ஆவது மட்டுமின்றி இறுதி நிலையும் ஆகமுடியும் என்று தெளிகிறோம். இதற்கப்புறம், பூரண யோகி, அதாவது சன்யாஸி புருஷனின் அழகான வர்ணனை 5/13 இலிருந்து 26 வரை வருகிறது. இறுதி சுலோகங்களான 24, 25, 26 யோகியின் அதாவது சன்யாஸியின் இறுதி முகாமென கீதை கூறுகிறதே, அந்த பிரம்ம நிர்வாணத்தை கூறுகின்றன. இந்த மூன்று சுலோகங்களில் 'பிரம்ம நிர்வாணம்' என்பதை மூன்று தடவை உச்சரித்து இருப்பது, கவனத்துக்குரியது. சுருக்கமாகச் சொன்னால் இரண்டாவது அத்தியாயத்தில் எந்த முகாமை வந்தடைந்தோமோ அங்கேயே திரும்பவும் 5/26 இல் வந்தடைந்தோம்.

ஆனால் தொடர்ந்து, 5-ம் அத்தியாயத்தின் இறுதி 3 சுலோகங்களான 27, 28, 29 என்ன சொல்கின்றன என்பது முக்கியமான கேள்வியாகும். ஏனெனில் இந்தக் கேள்வியின் பதிலில் தான் உங்கள் கேள்வியின் பதில் அடங்கி இருக்கிறது. இக்கேள்விக்கு பதிலிறுக்க நாம் ஒரேடியடியாக 12-ம் அத்யாயத்துக்குத் தாவவேண்டும். என்கருத்துப்படி 12-ம் அத்யாயம் என்பது பக்தியின் பாஷையில் 5-ம் அத்தியாயம். 5-ம் அத்யாயம் என்றால் கருமத்தின் பாஷையில் 12-ம் அத்யாயம். பக்தியின் பாஷையில் கூறுவோமானால்; யாதொரு கருமமும் செய்யாமலேயே எல்லாக் கருமங்களையும் புரிந்துவிடுவதான சன்னியாச நிலை, ஒருவிதத்தில் சொன்னால் நிர்குண உபாசனையாகும். எல்லாக் கருமங்களையும் புரிந்து விட்டு கருமச்சுமை தீண்டாமல் இருக்கும் யோகநிலை, ஒரு மாதிரியான ஸகுண உபாஸனை ஆகும். இவ்விருவித உபாஸனைகளையும் ஒப்பட்டுப பார்ப்பது 12-ம் அத்தியாயத்தின் விஷயம் ஆகும். இவ்வாறு ஒப்பிட்டு வழங்கப்படும் தீர்ப்பு, 5-ம் அத்தியாயத்தில் வழங்கப்பட்ட தீர்ப்பைப் போலவே கிட்டத்தட்ட இருக்கிறது. எப்படி யோகமும் சன்யாஸமும் ஒன்றோ,

அதே மாதிரி ஸகுண உபாசனயும் நிர்குண உபாசனையும் ஒன்றே. ஏனேனில் இரண்டும் நம்மை ஈசுவரனிடத்தில் அழைத்துச் செல்பவையே. ஆனால், சாதகனின் கோணத்தில் ஆராய்ந்து பார்த்தால், எப்படி யோகம் சுலபமானதோ அதேமாதிரி ஸகுண உபாஸனை எளிதானது.

யோகமில்லாமல், சன்னியாசநிலையை அடைவது எப்படி முடியாததோ (5/6-ல் முதல் பாதி) அதே மாதிரி, ஸகுணமின்றி நிர்குணத்தினைச் சென்றடைவதும் முடியாததொன்றே. (12/5 பின் பாதி). 12/5இன் இந்தப்பின் பகுதியுடன் 18/11இன் முன் பாதியை ஒப்பிட்டுப் பார்க்கலாம். கர்மம், பக்தி ஆகியவற்றின் பார்வையில், ஒரே கேள்வி எழும்புவதும், அவற்றுக்கு ஒரே விடை கிடைப்பதும் எப்படி என்பதும் அப்போது புரிகிறது. 5-ம் அத்தியாயத்துக்கும் 12-ம் அத்யாயத்துக்கும் உள்ள தொடர்பை புரிய வைப்பதற்காகவே இவ்வளவு விளக்கமும். அதனால் தான் 12-ம் அத்தியாயத்தில் பலனைத் துறத்தல் என்ற பேச்சு வருகிறது. (12/11, 12); 5-ம் அத்தியாயம் பக்தியுடன் முடிகிறது (5/29).

ஸகுண உபாஸனை, நிர்க்குண உபாஸனை இவற்றை முதலில் எங்கேயாவது வர்ணித்துவிட்டுப் பிறகு அவற்றைப் 12-ம் அத்தியாயத்தில் ஒப்பிட்டுப் பார்க்கிறோமா, அல்லது 12-ம் அத்யாயத்தில் தான் இவ்விஷயம் முழுவதும் முதல் தடவையாக விவாதிக்கப்படுகிறதா என்பது இப்போது கேள்வி.

முன்பே விவரிக்கப்பட்ட ஒரு விஷயத்தை இங்கு சீர்தூக்கி முடிவு கூறப்பட்டிருக்கிறது என்பதே இதற்கு விடை. 5-ம் அத்யாயத்துக்குள் கீதையின் முக்கிய விஷயம் முடிவடைந்துவிட்டது. 6-லிருந்து 17-ம் வரையுள்ள அத்யாயங்கள், நிஷ்காமகர்ம நிலையை எட்டுவதற்காக வெவ்வேறு வழிகளைக் கூறுவன. 18-ம் அத்தியாயம் கீதையின் முடிவுரை.

இவற்றின் நடுவிலுள்ள 6-லிருந்து 12-வரையிலான 7 அத்யாயங்கள் கீதையின் உபாஸனைப் பிரிவு ஆகும். இவற்றுள்ளும் ஆறிலிருந்து எட்டுவரை யிலான அத்யாயங்கள் பெரிதும் அவ்யக்த உபாஸ னையும், 9 இலிருந்து 12 வரையிலான அத்யா யங்கள் பெரிதும் வ்யக்த உபாஸனையும் ஆகும். பெரும்பாலும் என்று ஏன் கூறுகிறேன்? கீதை தர்க்க முறைப்படி துண்டுதுண்டாக்கி விவரம் தருவதில்லே, ஸகுணத்தில் நிர்குணம் வந்து விடுகிறது. நிர் குணத்தில் ஸகுணம் வந்து விடுகிறது. இது கீதை யின் பார்வைக் கோணம். அத்யாயம் ஆறிலிருந்து எட்டு வரை நிர்க்குண அவ்யக்த உபாஸனே என் றது எப்படி, 9 இலிருந்து 12 வரை ஸகுண வயக்த உபாஸனை என்றது எப்படி?

இதை இப்போது சிந்திக்க வேண்டும். அதற்கு முன் 5-ம் அத்யாயத்தின் இறுதி 3 சுலோகங்கட்கு என்ன முக்கியத்துவம் என்பதைக் கூறவேண்டும். அதற்கு இதுதான் இடம். 5-ம் அத்யாயத்தின் 27-ம், 28-ம், ஆன இரு சுலோகங்கள் அவ்யக்த* உபாஸனையைச் சுட்டிக் காட்டுகின்றன. 29 ஓ வ்யக்த,* ஸகுண உபாஸனையைக் குறிக்கிறது. இந்த இறுதி சுலோகம் 5/14, 15-க்கு விரோத மானதாகக் தோன்றுகிறது. இதை நீங்களும் கவ னித்திருக்கிறீர்கள். அதனால் தான் விரோதம் எனத் தோன்றும் அந்தப் பொய்த் தோற்றத்தை விலக் கும் வகையில், அதாவது, ஸகுண, நிர்குண ஒப்பு மையை 5/29 இன் கீழே "அனா ஸக்தி யோகத் தில்"** கூறுகிறது. சாரம் என்னவென்றால், 5-ம் அத்யாயத்தின் இறுதி மூன்று சுலோகங்கள் 6 இல் இருந்து 12-ம் அத்யாயம் வரையில் வரும் இருவித வழிபாட்டுக்கு முன்னுரை மாதிரியாகும்.

---

*அவயக்த உபாஸனை: வெளித்தெரியாத பரம்பொருளை வழிபடுதல்

வ்யக்த உபாஸனை: வெளித்தெரியும் " "

**"அனா ஸக்தியோகம்" —மஹாத்மா காந்தி கீதைக்குச் சுருக்கமாக எழுதிய உரை.

கீதையின் நிர்க்குண உபாஸனை பற்றிய கொள்கை என்ன என்பதைப் புரிந்து கொள்ள, 12-ம் அத்யாயத்தின் 1,3,4,5, சுலோகங்கள் பயனுள்ளவை. அந்த சுலோகங்களின்படி, நிர்குண உபாஸனையை கீதை அவ்யக்த உபாஸனை என்றும், அக்ஷர உபாஸனை என்றும் அழைக்கிறது (12/1-3). அதன் அங்கமாகப், ''புலன்களை நன்கு அடக்கி, எங்கும் சமத்துவ புத்தியுடன்'' (12/4ல் முன்பாதி) என்பதை வழி முறையாகக் கூறுகிறது.

இந்த வழியெல்லாம், அதிகச்சிரமமானது என்ற கருத்தையும் வெளிப்படுத்துகிறது. அக்ஷர உபாஸனை என்பதைச் சிலேடை என்றறிய வேண்டும். அக்ஷரம் என்றால், அழியாத பிரம்மம், என்ற ஒரு அர்த்தம், அக்ஷரம் என்றால், ஓம்காரம் என்று இரண்டாவது அர்த்தம். இதனுள் ''புலன்களை நன்கடக்கி எங்கும் சமபுத்தியுடன்'' என்ற வருணனையால், ஆறாம் அத்யாயம் முழுவதும் சுட்டிக் காட்டப்படுகிறது என்பது தெளிவு. ஏழாம் எட்டாம் அத்யாயங்களில், அவ்யக்த, அக்ஷர உபாஸனை தெளிவாக்கப்படுகிறது. (7/24, 8/3, 20 21 முதலிய ஓம்கார ரூபமான அக்ஷர (எழுத்து) உபாஸனை 8/13 ல் கூறப்பட்டிருக்கிறது. அந்த ஓம்கார உபாஸனை முறையாக 6-ம் அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிற வழி முறைகள் 8/10,12ல் திரும்பவும் வலியுறுத்தப் பட்டிருக்கின்றன. ஆறாம் அத்யாயத்தில் அர்ஜுனன் கேள்வி எழுப்ப, ''அனேக ஜன்ம ஸம்ஸித்தி'' முதலிய சுலோகங்களால், இந்த வழி முழுதும் கடினமானது என்பதையும் குறிப்பிட்டாகிவிட்டது. நம்பிக்கை இழக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதும் இங்கே தொனிக்கிறது. ஆனால் கடினமானது என்பது நிச்சயம். இந்த அவ்யக்த உபாஸனை முழுவதுமே, பதஞ்சலியின் யோகசாஸ்திரம் தான். யோகசாஸ்திரத்தினுள் இந்த விஷயத்தைப் பதஞ்சலியின் சொற்களிலேயே, இடையிடையே சூத்திரங்களை விட்டுவிட்டு, ஆனால் வரிசைகெடாமல் சுருக்கமாகச் சொல்கிறேன்.

1. அத யோகானு சாஸனம்
2. யோகச்சித்த வ்ருத்தி நிரோத:
3. ததா த்ரஷ்டு: ஸ்வரூ பேSவஸ் தானம்.
4. அப்யாஸ வைராக்யாப்யாம் தன்னிரோத:
5. ஈச்வரப்ரணிதானாத்வா.
6. தஸ்ய வாசக: ப்ரணவ:
7. தஜ்ஜபஸ் ததர்த்தபாவனம்.

இதில் முதல் நாலு சூத்திரங்களின் முழுவிஷயம் கீதையின் 6-ம் அத்யாயமாகும். 5-ம் சூத்திரம், 7-ம் அத்யாயம். 6, 7-ம் சூத்திரங்கள் 8-ம் அத்யாயம் ஈசுவரப்ரணி தானாத்வா என்ற சூத்திரம். அப்பியாஸ வைராக்யாப்யாம் என்பதற்குப் பதிலாக இல்லை. அதாவது, பயிற்சி, வைராக்யம் இவற்றைச் செய், அல்லது ஈசுவரனைச் சரண்புகு-இப்படி இல்லை. அப்யாஸ வைராக்யத்துடன் ஈசுவரப்ரணி தானத்தை இணைக்க வேண்டும். ஈசுவரப்ரணி தானம் என்றால் அவ்யக்த ஈசுவர தியானம் என்று பொருள்.

இந்த யோகசாஸ்திர விஷயம் முழுவதும் 6 லிருந்து 8 ம் அத்யாயத்துள் முழுக்க வந்து விட்டது. இதோடு கூட, அக்னிமார்க்கம், புகைமார்க்கம், என்ற யோக சாஸ்திரச்சொல் வழக்கையும் 8-ம் அத்யாயத்தில் கொடுத்து, அந்த அத்யாயத்தை முடித்து வைத்திருக்கிறது.

இப்போது நாம் வ்யக்த உபாஸனை பக்கம் திரும்புவோம். கீதையின் வ்யக்த உபாஸனை அவ் யக்த உபாஸனைக்கு எதிரானது அன்று. அவ்யக்தத் தின் ஒளியே வ்யக்தம். இந்த உபாஸனை ஸ்ரீமத் பாகவதம், துளசி ராமாயணம் ஆகிய நூல்களில் விவரிக்கப்படும், ஸாது புனிதர்களால் பாடப்பட்ட, புகழ் பெற்ற பக்தி மார்க்கமே, 9 லிருந்து 12-ம் அத்யாயங்களில் கூறப்படும் விஷயம் அதுவே.

அவ்யக்த உபாஸ்னையின் உருவத்தை 'தியானம்' என்ற சொல்லால் வருணிக்கலாம். பக்தி

மார்க்கம் என்பதற்கு அன்பு என்பது பொருள். இதையே, ராஜவழி, ராஜவித்தை என்று கூறுகிறோம். (9/2) இதன் முக்கியச் சிறப்பு நேரிடையாகக் காணக்கிடைப்பது (9/2) இதில் நம்பிக்கைக்கு மட்டுமே வேலை நடைமுறைக்கும் இது மிக எளிது (ஸுஸுகம் கர்த்தும் 9/2) அவ்யக்த உபாஸனை மாதிரி கடினமானதல்ல. நம்பிக்கை குறைவின் காரணமாகத்தான் ஜனங்கள் இந்தப்பக்கம் வருவதில்லை. இவ்வழி எப்படிப்பட்டது என்றால் யார் வேண்டுமானாலும் இவ்வழியில் வரலாம். (9/3) மானுட வடிவம் ஈசுவரனின் உருவமே அதற்குப் பணிபுரிவதே இவ்வழியின் சிறப்பு. மானுட உருவை அவமதித்தல் ஈசுவரனையே அவமதிப்பதாகும். (9/11) தன் கையால் இம்மானுட உருவை அவமதித்து விட்டுத்தான், அர்ஜுனன், பின்னல் கழிவிரக்கம் கொள்ள வேண்டி வந்தது. (11/41) பக்தியின் புதுப்பார்வை கிட்டியபின் அர்ஜுனன் மானுட உருவத்தைக் கண்டு ஆனந்தம் அடைகிறான். (11/51). அனைத்து வேள்விகளுள்ளும், ஞான வேள்வி சிறந்தது என்பது சரிதான். ஆனால் ஹரியினிடத்தில் அன்பு என்னும் சாயம் ஏறிப்போனவர்கள் ஹரியின் திருநாம நினைவு என்னும் ஜபயக்ஞத்தையே உயர்ந்ததென எண்ணுகின்றனர். (10/25) ஞானத்தைக் கொடுக்கும் பகவான் அனைத்தும் வல்லவர். (10/11,12). 6-ம் அத்யாயத்தில் கூறினபடி, புலன்கள் அனைத்தையும் மன ஓட்டம் அவ்வளவையும் நிறுத்துவதற்கு பதிலாக பக்தி மார்க்கத்தில் அவற்றை ஈசுவரனுக்கு அர்ப்பணிக்க வேண்டியிருக்கிறது. (9/27). பாவஜன்மம், புண்ய ஜன்மம் என்ற பாகுபாடு எதுவும் இவ்வழிக்குத் தெரியாது. இத்தருமம், எல்லா வருணங்கட்கும் திறந்திருப்பது. ஏனெனில் இங்கே அன்பு ஒன்றுக்குத்தான் வேலை (9/32) நித்தியம் சேவை, நாள்தோறும் கீர்த்தனை, உற்சவம், இது இவ்வழியின் உருவம் (9/14,10/9, 11/36) வணங்குதல், பணிவுடையவராதல் அனைத்திலும் உயர்ந்தது. (9/14,34, 11/36, 37,39,40 முதலிய)

சுலோகம் 9/2ன் தர்ம்யம், 9/3 இன் ''நம்பிக்கை அற்ற'' சொற்களுடன் 12/20இன் "தரும அமுதம்'' ''நம்பிக்கையுடைய'' சொற்களை ஒப்பிட்டால், 12 ம் அத்யாயத்தில் பூர்த்தியாகிற விஷயம், 9 ம் அத்யாயத்திலேயே ஆரம்பிக்கப்பட்டுவிட்டது என் பது புரிந்துவிடுகிறது.

இந்த தரும அமுதம் (12/20) என்பதன் பொருள் 12 ம் அத்யாயத்தில் கூறப்பட்ட பக்தனின் அடையாளங்கள் என்ற தருமஅமுதம் என்ற பொருள் இருக்கவே இருக்கிறது. 9 இலிருந்து 12 ம் அத்யா யம் வரை கூறப்பட்ட தர்ம அமுதமும் இதில் குறிப் பிடப்படும். இந்த அமுதம் (சாவாமை) என்ற சொல் லுடன் 9/3 ல் வந்திருக்கும் ம்ருத்யு (இறப்பு) எனும் சொல்லை ஒப்பிட்டுப் பாருங்கள். அதே மாதிரி 9 ம் அத்யாயத்தின் இறுதி சுலோகம் என்றால் 11 ம் அத்யாயத்தின் இறுதி சுலோகமும் 12/1 இல் வந்தி ருக்கும் 'ஏவம்' என்ற சொல் இந்த இரண்டு சுலோ கங்களையும் குறிப்பதாகும், என்றறிய வேண்டும். அதிகம் விவரிப்பானேன். சுருங்கக்கூற வேண்டுமா னால். 10, 11, 12 இந்த அத்யாயங்களிலிருந்து 9-ம் அத்யாயத்தை எவ்விதமாகவும் பிரிக்கமுடியாது 9-ம் அத்யாயம் தாயின் ஸ்தானத்தில் இருக்கிறது. 10, 11 அதன் குழந்தைகளைப் போலிருக்கின்றன. 11/1 இல் அர்ஜுனன் எனது மோஹம் ஒழிகிறது என்கிறானே, அதுவும் 9-ம் அத்யாயத்தைக் குறித் தேதான், உயர்ந்தது. ரகசியமானது, ஆன்மாவைக் குறித்தது (11/1) என்பதே 9-ம் அத்யாயத்தின் ராஜ வித்தை, ராஜ ரகசியம் ஆகும். அத்யாயம் 6-லிருந்து வரையான அவ்யக்த உபாஸனை அத்யாயம் 9 இலி ருந்து 12 வரையான பக்திமார்க்கம் இவற்றிடையே உள்ள வித்தியாசத்தைச் சுருக்கமாகக் கூறவேண்டு மானல் ஓம்காரம், ராமநாமம் இரண்டுக்கும் இடையே உள்ள வித்தியாசத்தைப் போன்றது என்று கூறவேண்டும்.

தங்களுடைய முக்கியமான கேள்விக்கு விடை இவ்வளவில் வருகிறது. எனினும், விஷயத்தை

முழுமையுறச் செய்வதற்காக அடுத்த செய்தியைக் கூறுகிறேன்.

அத்யாயம் 13, 14, 15 ஞானமார்க்கமாகும். ஞானமார்க்கம் பக்திமார்க்கத்திலிருந்து மாறுபட்டது என்று கூறத்தேவை இல்லை. இருந்தாலும் கீதை அதிலும் பக்தியை இணைத்துவிட்டு என்பக்தன் (13/18, 14/26, 15, 19) என்பதைப் பாருங்கள். ஆனால் இவ்வழி அவ்யக்த உபாஸனையிலிருந்தும் மாறுபட்டதாகும். அவ்யக்த உபாஸனையில் த்யானம், பக்தி வழியில் அன்பு, ஞானவழியில் ஆய்ந்தறிதல் அல்லது விவேகம் முக்கியமானது. த்யான வழி என்றால், முக்கியமாகப் பதஞ்சலி, பக்தி மார்க்கம் என்றால்வைஷ்ணவ சம்பிரதாயம், ஞானமார்க்கம் என்றால் ஸாங்க்யமும், வேதாந்தமும். வேதாந்தக்ருத் (15/15) ஞானமார்க்கத்தைக் கூறியபின் உண்மையில் கீதை முடிந்து போயிற்று என்பதைக் கவனியுங்கள் (இந்த ரகசியமிகு சாத்திரம்) 15|20 என்பதன் பொருள் 15-ம் அத்யாயம் இருக்கவே இருக்க, இதுவரை கூறப்பட்ட கீதைசாத்திரம் முழுக்க என்றே நான் நம்புகிறேன். சாத்திரம் என்ற சொல்லை இங்குதான் முதன்முதலில் கீதை பிரயோகம் செய்கிறது. பிறகு அதே சொல் 16ம் அத்யாயத்தின் இறுதியிலும் 17ன் ஆரம்பத்திலும் வருகிறது.

இதன் மேல் அத் 16, 17ஐ நான் முடிவுரையாக அனுபந்தமாக நினைக்கிறேன். கீதையின் சமூகவியல் முழுக்க அதில் வருகிறது. சமூகவியலின் ஆதாரம் சமூகத்தில் தனி மனிதரின் நல்லியல்புகளை, நற்குணங்களை (அத் 16) அதனோடு இசைந்த நற்செயல்களை, சாத்துவிக யக்ஞ, தான தவத்தைச் (அத் 17) சார்ந்திருக்கிறது. இவ்விரு அத்யாயங்களும் 9-ம் அத். யின் பிற்சேர்க்கையாம். அத் 16, 9/12, 13 இன் பின் தொடர்புடையது. 17-ம் அத். திற்கு 16-ன் தொடர்பு 17/1 இல் அர்ஜுனனின் கேள்வியிலேயே தெரிந்து விடுகிறது.

இதைத்தவிர அந்த அத்யாயம், 9/27 ல் கூறப்பட்ட பக்திமார்க்கத்தின் முக்கிய விதிகளை விளக்கி, விவ ரிக்கும் அனுபந்தமுமாகும்.

| | | | |
|---|---|---|---|
| எதை உண்பாயோ என்றால் 17இன் (யதச்னாஸி) | | | உணவு |
| எவ்வேள்வி செய்தோ (யஜ்ஜுஹோஷி) | ,, | ,, | யக்ஞம் |
| கொடுத்து | ,, | ,, | தானம் |
| தவம்புரிந்து | ,, | ,, | தவம் |
| அதை எனக்கு அர்ப்பணம் செய் | ,, | ,, | ஓம்தத் ஸத் என்ற பிரிவு |

ஸமர்ப்பணம் செய்யும் நெறி பக்திமார்க்கத் துக்கு ஜீவநாடி. ஆனால் ஸமர்ப்பணம் செய்வது என்றால் எதை வேண்டுமானாலும் அர்ப்பணம் செய்வது என்பதல்ல. சுத்தஸத்துவத்தையே சமர்ப் பணம் செய்ய முடியும், என்று 17-ம் அத்யாயம் கூறும். 17-ம் அத்யாயத்துக்கு (காந்தி) ஆசிரமத் தின் கோணத்தில் 'செயல் திட்டயோகம்' என்று பெயரிடுகிறேன். காலையில் எழுந்து முதலில் பிரார்த்தனை. (நம்பிக்கை; சிரத்தை) பிறகு சிற் றுண்டி முதலியன (உணவு) பிறகு சேவை (யக்ஞ, தானம், தபம்) பிறகு இறுதியில் மாலைப் பிரார்த் தனையில் அனைத்தையும் அர்ப்பணம் செய்தல் (ஓம் தத்ஸத்)

இதற்கப்புறம் 18-ம் அத்யாயம், இந்த விவே சனம் முழுவதையும் திரும்ப ஒரு தடவை சுருக்க மாகக் கூறுகிறது. கீதையின் முக்கிய விஷயமாக முதல் 5 அத்யாயங்கள் கூறுகிறதே அங்கிருந்தே 18-ம் அத்யாயம் துவங்குகிறது.

அது, சாதனங்கள் அனைத்திலும் சிறந்ததான பக்தியோகத்துடன் (9-ம் அத்யாயத்தில் வர்ணிக்கப் பட்டுள்ளது) முடிகிறது. 9/1, 9/34;இவ்விரு சுலோ

கங்களையும் நன்றாகப் பயின்றுவிட்டுப் பிறகு 18/64, 65 ஆகிய சுலோகங்களைப் படிப்போம். 9-ம் அத்யாயத்துக்கு கீதையில் ஒரு சிறப்பிடம் உண்டு. அந்த அத்யாயம், புனிதர்கட்கு மிகவும் பிரியமானது. ஞானேஸ்வரர் 9-ம் அத்யாயத்தைப் பாராயணம் செய்து கொண்டே ஸமாதி அடைந்தார். மகளிர், சூத்திரர் ஆகியோர்க்கு உதவ இந்த அத்யாயம் ஓடோடி வருகிறது. அதில் பக்திவழியின் மிக உயர்ந்த சிகரம் இருக்கிறது. இவ்வத்தியாயத்தைக் கேட்டவுடன் அர்ஜுனனுக்கு அதிசய ஆனந்தம் உண்டாயிற்று. (ப்ரீயமாணாய 10/7) ஆகவே 10-ம் அத்யாயத்தை பகவானே தானே முனைந்து கூறினார். அதனால் அர்ஜுனனின் குழப்பம் மேலும் தீர்ந்ததென்று 11/1 கூறுகிறது. அதன் உயர்வின் மீது வைத்த முத்திரையாக 12 ம் அத்யாயம் அமைகிறது. 16, 17 ம் அத்யாயங்கள் அனுபந்தமாகும். பின்னுரையான 18 ம் அத்யாயம் 9 ம் அத்யாயத்தைத் திரும்ப உரைத்ததாகும்.

இப்படி கீதையின் அத்யாய வரிசையைப் பற்றி என் கருத்துக்களை சுருக்கமாகக் கூறியிருக்கிறேன்.

மேற்கண்ட விவேசனத்தில் உங்கள் கேள்விகட்கு விடை வந்துவிட்டது. முதல் 5 அத்யாயங்கள் பிறகு 6 ம் அத்யாயத்தின் பொருட்கள் வெவ்வேறு ஆனவை. சமத்துவம் பெற உதவும் ஸாதனம் என்ற முறையில் ஆறாம் அத்யாயத்தை 5 உடன் பிணைத்தாலும் தடுமாற்றம் ஏற்படுகிறது. ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், ஆகியவையே சமத்துவம் பெறுவதற்கு இணையற்ற உபாயங்கள் ஆகும் என்ற எண்ணம் அதிலிருந்து உண்டாகிவிடும். அது விரும்பத்தக்கது அல்ல. உண்மையில் ஸமத்துவம், கீதையின் மையப்புள்ளி ஆகும். எல்லா வழி முறைகளாலும் இந்த இறுதிப்பலனை அடைய கீதை விரும்புகிறது. உதாரணமாக 13-ம் அத்யா

யத்தில் கூறப்படும் விவேகத்திற்கும் எதிர்பார்க்கப் படும் பயன் ஸமத்துவமே (13|2,728) ஆகவே ஆறாம் அத்யாயத்தை 5-ம் அத்யாயத்துடன் பிணைத்தல் உசிதமன்று. அது 12 ம் அத்யாயத்தின் சிந்தனைப் போக்குடன் ஒத்துவராது என்று நானே மேலே கூறி வந்திருக்கிறேன், அவ்யக்த உபாஸனையும் சுற்றி வளைத்து உபாஸனையேயாம். ஆகவே அதிலும் ஒரு மாதிரியான பக்தி உணர்வு இசைந்தே இருக்கும். அதன்படி 6, 7, 8, மூன்று அத்யாயங்களிலுமே பக்தி சற்றேனும் குறிப்பிடவே படுகிறது. உண்மையில் எதை பக்தி மார்க்கம் என்கிறோமோ அது 9-ம் அத்யாயத்திலிருந்து ஆரம்பமாகிறது. 9|1 இன் 'இதம்து' சொற்றொடரில் 'து' என்ற சொல் வருகிறதே அது 8 லிருந்து 9 ம் அத்யாயத்தைப் பிரித்து விடுவதற்காகவே.

சுருக்கமாக எல்லாவற்றையும் கூறி விட்டேன். கீதையின் வாராந்திர பாராயண வரிசை முறையை அதன் தீர்மானத்துடன் சொல்லுகிறேன்.

வெள்ளி: அத்யாயம் 1-2-அறிவின் திடத்துவம் (ஸ்திரபுத்தி) - முழுயாத்திரையும் சுருக்கமாக

சனி: அத் 3-4-5-பயனைத் துறந்த கருமம். (யாத்திரை விளக்கமாக)

ஞாயிறு: அத் 6-7-8- தியானமார்க்கம் (அவ்யக்த உபாஸனை)

திங்கள்: அத் 9-10-11-12 பக்தி மார்க்கம் (ராஜ வித்தை, அவ்யக்தத்துடன் விரோதமில்லாத வ்யக்த உபாஸனை)

செவ்வாய்: அத் 13-14-15 ஞானமார்க்கம் (சிந்தனை விவேகம்)

புதன்: அத் 16, 17 நல்லியல்புகள் வளர்தல் (நற்காரியங்களுடன் சேர்ந்து)

வியாழன்: அத் 18 தியாகம்

வர்தா, அடிபணிந்து வணங்குவது,
16-6-34. வினோபா

—— ——

# பண்பாட்டுத் துறையில் கேந்திரம் ஆற்றும் பணிகள்

---

1. ஆரோக்கியமான நூல்களை வெளியிடுதல்.
2. பாரதப்பண்பாட்டைப் பற்றிய சிறு நூல்களை சலுகை விலையில் வழங்குதல்.
3. துண்டுப்பிரசுரங்கள், சுவரொட்டிகளின் மூலம் ஸ்வாமி விவேகானந்தரின் கருத்துக்களைப் பரப்புதல்.
4. ஆன்மீகத் தொடர்புள்ள நூல்களை பரவலான முறையில் குக்கிராமங்களிலும் விற்க ஏற்பாடு செய்தல்.
5. பண்பாட்டைப் பற்றிய சொற்பொழிவுகள், திரைப்படக் காட்சிகள், ஸ்லைடு காட்சிகள் போன்ற நிகழ்ச்சிகளை நடத்துதல்.
6. கிராமங்களில் சிறு நூலகங்களை நிறுவி நல்ல நூல்களைப் படிக்க கிராமமக்களுக்கு உதவுதல்.
7. நூற்றுக்கணக்கான கிராமங்களில் பண்பாட்டுப் வகுப்புகளை நடத்துதல்.
8. மாணவர்களுக்கான பண்பாட்டுப் போட்டிகளை நடத்தி நல்ல நூல்களை பரிசாக அளித்தல்.
9. விவேகவாணி என்ற மாதப் பத்திரிகையை வெளியிடுதல்.

**விவேகானந்த கேந்திரம்,**
கன்னியாகுமரி-629702.
தமிழ்நாடு.